# வாதவூர் வள்ளல் பிள்ளைத்தமிழ்



முனைவர் மூ.அங்கப்பன்

# வாதவூர் வள்ளல் பிள்ளைத்தமிழ்



ஆசிரியர்
**முனைவர் மூ.அங்கப்பன்**

வெளியீடு :
**சுந்தரவடிவு பதிப்பகம்**
முதன்மைச் சாலை
கணக்கம்பாளையம் - 638 505
ஈரோடு மாவட்டம்.

# நூல் விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | வாதவூர் வள்ளல் பிள்ளைத் தமிழ் |
| ஆசிரியர் | : | **முனைவர் மூ.அங்கப்பன்** |
| முதல் பதிப்பு | : | 2013 |
| பதிப்புரிமை | : | ஆசிரியருக்கே |
| நூலின் அளவு | : | டெம்மி |
| எழுத்து | : | 12 புள்ளி |
| பக்கங்கள் | : | 24 + 82 |
| படிகள் | : | 1200 |
| மேலட்டை<br>வடிவமைப்பு<br>கணினி<br>அச்சுக்கோவை<br>அச்சிட்டோர் | : | **ஜெம் ஆப்செட் பிரிண்டர்ஸ்**<br>24, சத்தி ரோடு, ஈரோடு - 4.<br>பேசி : 0424 - 2222271 |
| விலை | : | ரூ. **70.00** |
| வெளியீடு | : | சுந்தரவடிவு பதிப்பகம்<br>முதன்மைச் சாலை,<br>கணக்கம்பாளையம் - 638 505.<br>ஈரோடு மாவட்டம். |

முதுபெரும் தமிழறிஞர் தமிழண்ணல்

மதுரை



# அணிந்துரை

திருவாசகத்தைப் போற்றும் ஒரு வாசகம் வாதவூர் வள்ளல் பிள்ளைத்தமிழ்.

முனைவர் மூ.அங்கப்பன், திருவாசகத்தில் கொண்ட ஈடுபாட்டால், திருவாத வூரராம் மாணிக்கவாசகர் மீது 'பிள்ளைத்தமிழ்' பாடியுள்ளார்.தமிழில் பிள்ளைத் தமிழ் இலக்கிய வகை பெருஞ்சிறப்புப் பெற்றது. கடவுளரை, சான்றோர்களைப் பிள்ளையாகப் பாவித்து'', புனைந்து பாடுவது, ஓர் இனிமைதரும் கற்பனை ஊற்றாகும்.

கவிஞர் அங்கப்பன் மரபுவழிப் பாவலராக விளங்குகிறார். பிள்ளைத் தமிழ் என்றால் 'கழிநெடில் ஆசிரிய விருத்தங்கள்' நினைவில் வரும். நீதி நூல்கள் வெண்பா வகைகளால் உருவாகும். உலா, தூது என்பவை கலிவெண்பாவால் பாடப்படும். இங்ஙனம் வகைக்கொரு வடிவங் கொள்வது தமிழின் சிறப்புக்களில் ஒன்றாகும்.

பாவலர் அங்கப்பனின் பாப்புனையும் ஆற்றல், இந்நூலில் நன்கு வெளிப்படுகிறது. கருத்துக்கும் உணர்ச்சிக்கும் ஏற்ற பலவகைச் சந்தங்களில் பாடுகிறார்.

இப்பிள்ளைத் தமிழ் முழுவதும் திருவாசகச் சொற்கள், அடிகள், தொடர்கள், விரவி வருகின்றன. அவை இவரது திருவாசகப் புலமையையும் வெளிப்படுத்துகின்றன.

முன்னதாக இவர் பாடியிருக்கும் வேந்தன்பட்டி நெய்நந்தி விருத்தம், பத்திமையுடையோரால் பெரிதும் போற்றிப் படிக்கத் தக்கதாய் உளது.

இந்நூலில் வரும் - எடுத்ததும் தொடுத்தபாடல் இன்றையத் தமிழனைப் படம் பிடித்துக் காட்டுகிறது.

''தமிழுணர் வில்லை, தமிழறிவில்லை
தமிழர்கள் யாருமில்லை !

தன்னைத் தமிழன் என்று கூறிக்கொள்ள, உலகத் தமிழன் பெரிதும் கூச்சப்படுகின்றான்.

தமிழுணர்வோடு தமிழறிந் தோரைத்
தமிழர்கள் மதிப்பதில்லை...
தமிழனுக் கெதிரி தமிழனே யன்றித்
தரணியில் யாருமில்லை
தமிழினில் உள்ள மேலான நூல்களைத்
தமிழனே கற்பதில்லை !

இன்றைய தமிழ்மக்களின் நிலையை, உணர்வு பொங்கக் காட்டும் இப்பாடல், உள்ளத்தை நெருடுகிறது.

காப்புப் பருவப் பாடல்களில் தமிழ்த் தாயையும் மாணிக்கவாசகச் சேயைக் காக்குமாறு வேண்டுவது உள்ளத்தைத் தொடுகிறது.

தேனூறு மொழியே, தித்திக்கும் கனியே
திருவடி வணங்குகின்றேன்
திருவாசகமெனும் அமுதுமொழி கொண்டல்
சேயினைக் காக்க வென்றே!

எனப் பாடுகிறார்.

மாணிக்க வாசகரே திருவாசகம் எனுமாறு, இந்நூல் முழுவதும் திருவாசகத்தில் வரும் சிவநெறிக் கருத்துக்கள், மெய்யியலாம் தத்துவம், சிவபெருமானின் சிறப்பினைக் கூறும் நூல்களின் சாரம் எல்லாம் விரவி வருகின்றன. திருவாசகத்தில் வரும் வரலாற்றுக் கூறுகள், மெய்யியல் கருத்துக்கள் ஆகியவை இந்நூலில் வருமிடங்களில், அவற்றை விளக்கிவிடுவது, இப்பாடல்களைப் படிப்போர்க்கு முழுமையாய் அறிந்து படிக்கத் துணையாகும்.

செங்கீரைப் பருவத்தில் வரலாற்றுக் குறிப்பு வரும் பாடல் இது :

பெண்ணூறு சுமந்த பாகத்தன் முடிமேல்
பிறை துயர் உறும் வண்ணம்
பெருங்கரை அடைக்க மண்கூடை சுமந்துமே
பிட்டுண வைத்த மணியே!

திண்ணப்பன் என்பினைப் பண்போடு புகழ்ந்தவா
செங்கீரை ஆடியருளே !

இதில் பிட்டுக்கு மண்சுமந்ததை விளக்க வேண்டும் ; கண்ணப்பரைப் பற்றி, மாணிக்கவாசகர் பாடிய பாடலடிகள் தரப்பெற்றால் கவிஞர் திறம் வாசகர்களால் உரைப்படும்.

சரியை, கிரியை, யோகம், ஞானமெனச்
சான்ற நெறி நான்மைக் குள்ளும்
சான்றோர்கள் போற்றும் ஞானநெறிதனைச்
சாலவே புகழ்ந்துரைத்த
தெரிவரிய பரஞ்ஜோதி, திருவாதவூர் மணிநீ
செங்கீரை அடியருளே!

இதிலுள்ள மெய்யியல் உண்மையை இரண்டிரண்டு அடிகளில் விளக்கலாம்.

மாணிக்க வாசகர் இறைவனோடு பேசுவது போல, இவர் மாணிக்க வாசகரோடு பேசுகிறார்.

எட்டோ ரிரண்டையும் அறியாதவன் என்றே
எப்படி உரைக்கலாம் நீ?

என வினவுகின்றார். (செங்கீரை).

இறைவனைக் கண்ணாற்கண்டதாகப் பாடுகிறார், மாணிக்கவாசகர்.

'அது பழச் சுவை என அமுதெனப் பலவாய்
அறிந்துணராத மற்றோர்
எவரிவர், ஏதிவரூர், யாருற்றார், யாரயலார்

எனக் கூறித் துறவு பூண்டோர்

''இவரெல்லாம் காணாத திருவடி உனைத்தேடி
ஏக்கற் றலைந்த தையோ!''

என்று, வாசகரின் மேன்மையைப் புகழ்கின்றார்.

திருச்சதகம் நூறு பாடல்களில் வரும் பக்தியின் படிநிலைகள் பத்தினையும், ஒரு பாடலில் வைத்து, வாசகத்தை அறிமுகப்படுத்துகிறார் (சப்பாணிப் பருவம்)

அதே பருவத்தில் அமுதம் என்ற சொல்லைத் திரும்ப வரும் சொற்பொருள் பின்வரும் அணியாய் வைத்து, இனிமை தவழப் பாடியுள்ளார்.

கடலுக்குக் கரையில்லை வானுக்கு வரையில்லை,
காற்றுக்கு வேலி இல்லை,

எனத் தொடங்கும் சப்பாணிப் பருவப் பாடல், கவிஞரின் கவித்திறனுக்குக் கட்டியம் கூறுகிறது.

திருவாசகத்தால் தாம் பெற்ற பேற்றினை, வருகைப் பருவத்தில் பதிவு செய்கிறார், கவிஞர் அங்கப்பன்.

வினையிலே கிடந்தேன் ! துயரிலே சுழன்றேன் !
வீணருக் குழைத்து நொந்தேன்
விடியலைக் காணேன், விதிவலைப் பட்டேன்
வேதனை வாரி வீழ்ந்தேன்

திருவாசகத்தைப் பலமுறை படித்ததால், இது போன்ற பாடல்களில் அதன் சாயல் படிகிறது எனலாம்.

பெரிய புராணத்தில் வரும் 'பூசலார்' வரலாறு ஒரு பாடலில் பதிவாகிறது.

''வல்லவர் பூசலார் எனும் அன்பர்
வாகாய் அமைத்த குடிபுகுவோம்
மற்றொரு நாளைக் குறித்திடு கென்றார்
மாவடி காணா மறைவேந்தர்'' (சிற்றில்)

பல்லவ மன்னனின் கனவிலே கூறிய இதனை,

இதன் அருமை கருதி, எடுத்தாண்டுள்ளார். உள்ளம் அன்பு என்பது உள்ளத்திலிருந்து வருவது ; பிற எல்லாம் 'ஆகுல நீர' என உணர்த்துவது இது.

சிறு தேர்ப் பருவத்தில் திருவாசகத்தை ஒரு தேராக உருவகம் செய்திருப்பது, பாவலரின் கவித்திறனுக்கும் தமிழ்ப் புலமைக்கும் சான்றாக அமைகிறது.

சக்கரம் நான்கதும் முதல் நான்கு அகவலே
தாங்கிடும் அச்சாணியாய்ச்
சதகமும், விண்ணப்பம் கடையாணி பாவை
தகவுடை மேடையாக
அக்கரத் தூணாக அம்மானை, வழிபட
அம்பொற் சுண்ணம் கொண்டே
அழகான மாலையாய்க் கோத்தும்பி, மேருவாய்
அரிய தெள்ளேணம் கொண்டு
கைக்கரச் சாழலும், உந்தியார் நோக்கமும்
கவின்பெரு கலச மாக்கிக்
கனியாய்க் குழைதல் பிடித்தபத்தென் பன
கயிறென விளங்கித் தோன்றத்
தக்கதொரு தேரிது ! தணல் அண்ணாமலைநற்
சான்றோர்கள் தவமிருக்கும்
சாறுமிகு வீதியில் வானவர் வலம்வரத்
தமிழ்த் தேர் உருட்டி யருளே!

பாவலர் அங்கப்பனார் பாடிய பிள்ளைத் தமிழின் முடிமணி போன்றது இப்பாடல் !

முனைவர் அங்கப்பனின் இப்பிள்ளைத் தமிழ், தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒரு புதுவரவு எனப் பொறிக்கத் தக்கது. வள்ளாலார் திருவாசகம் பற்றிப் பாடும் போது, 'ஊன் கலந்து, உயிர் கலந்து உவட்டாமல் இனிப்பதுவே' என்றார். இப்பிள்ளைத் தமிழும் சிறிதும் தெவிட்டாமல் இனிமையைப் பொழிகிறது.

பாவலர்க்கு என் பாராட்டும் வாழ்த்தும் உரியன !

அன்புடன்

**தமிழண்ணல்**

24.06.2013



பா.சா.சிங்காரம் செட்டியார்
தலைவர், சன்மார்க்கசபை
மேலைச்சிவபுரி




துடியன்ன மெல்லிடையாள் உமையாள் நங்கை
உளமுறையும் பரம்பொருளைச் சிவனார் தம்திரு
அடிபோற்றி வாதவூரார் வாழ்வில் வென்றார்
அவர்பெயரில் அங்கப்பன் பனுவல் செய்து
அடியார்கள் திருக்கூட்டில் ஒருவர் ஆனார்
அவனியிலே நிலையான பேறு பெற்றார்
விடிகின்ற பொழுதெல்லாம் அன்பே வெல்லும்
அன்பேதான் சைவமென்றிக் கவிதை சொல்லும்

உருவங்கள் பலவாகத் தோன்றி நின்ற
உத்தமரைப் பரம்பொருளைச் சிவனார் தம்மைக்
குருவாகக் குருந்தடியில் கண்ட செம்மல்
சிவப்பாட்டை வாசகமாய்த் தந்து நின்றார் ;
திருப்பாட்டைப் பாடிநின்றால் உள்ளம் கரையும்
''போப்''போன்ற அடியவரே அதற்குச் சாட்சி
அரும்பொருளின் அடியவரைக் குழந்தை யாகக்
காணவைத்த அங்கப்பன் வாழி வாழி.

அன்புடன்
**பா.சா.சிங்காரம் செட்டியார்**

**சி.நாகப்பன் எம்.பி.ஏ.,**
தலைவர், கல்லூரிக் குழு
கணேசர் கலை அறிவியல் கல்லூரி, மேலைச்சிவபுரி



## வாழ்த்துரை

மேன்மை கொள் சைவ நீதியும் தமிழும் செழிப்புடன் வளரும் ஊர் மேலைச்சிவபுரி. இவ்வூர்க்குப் பெருமையைத் தருவது ஆவணி மூலத் திருவிழா. இறைவனின் திருவிளையாடல்களை இன்றைய மக்களுக்கு நினைவூட்டும் விழா. அவ்விழாவில் எங்கள் குடும்பத்தார் நடத்திவரும் விழா ''நரியைப் பரியாக்கியது''. எம்பெருமான் இறைவன் திருநிறை அடியவர் மாணிக்கவாசகருக்காகக் குதிரைப் பாகனாய் மதுரை நகரில் எழுந்தருளிய நிகழ்வு அது. அந்நிகழ்வின் நாயகர் மாணிக்கவாசகர்.

எம் குடும்ப நிறுவனமாகிய சன்மார்க்க சபை கணேசர் கலை அறிவியில் கல்லூரி சிறந்த பாரம்பரியமும், நூறாண்டு பழமையும் வாய்ந்தது. தமிழகம் எங்கும் இருந்து மாணவர்கள் இங்கு வந்து தமிழ்க் கல்வி பயின்றனர். இங்கு படித்த பலர் நல்ல பேச்சாளர்களாகவும், சிறந்த கவிஞர்களாகவும் விளங்குகின்றனர். அந்த வகையில் இந்நிறுவனத்தின் முன்னாள் மாணவர் அங்கப்பன் அவர்கள் ''வாதவூர் வள்ளல் பிள்ளைத்தமிழ்'' என்ற சிற்றிலக்கியத்தை எழுதியுள்ளார். இக்கல்லூரியின் முன்னாள் மாணவர் முனைவர் க.வீ.வேதநாயகம் இந்நூலைப் பதிப்பித்துள்ளார். இது எம் கல்லூரிக்கும் தமிழுக்கும், சைவத்திற்கும் பெருமை சேர்ப்பதாகும். பாராட்டுக்கள்.

வாதவூர் வள்ளல் பிள்ளைத்தமிழ் சிற்றிலக்கியம் எனினும் சைவ அன்பர்களைப் பேரின்பத்தில் திளைக்கச் செய்யும் ஆன்மீக நூலாகும். இதில் கற்பார் உள்ளத்தைக் கரையச் செய்யும் 'திருவாசகத்தேனில்' அவர் திளைத்த திளைப்பு கவின்மிகு கவிதைகளாக வெளிப்பட்டுள்ளது. மாணிக்கவாசகரின் சிறப்பும், சிவபெருமான் அருள்திறமும் பிள்ளைத்தமிழ் முழுவதும், எளிய தமிழில் மிகவும் நுட்பமாகச் சொல்லப்பட்டுள்ளன.

ஆசிரியர் சைவநெறியில் ஆழ்ந்து விளங்கும் திறம் அவர் நூல் வழி அறிந்து பாராட்டுகின்றேன். வாழ்க வளமுடன்.

அன்புடன்
**சி.நாகப்பன் எம்.பி.ஏ.,**

**அ.சாமிநாதன்** பி.ஏ.,
செயலர், கல்லூரிக் குழு
கணேசர் கலை அறிவியல் கல்லூரி, மேலைச்சிவபுரி



# வாழ்த்துரை

உலகில் தோன்றிய உயர்ந்த சமயங்களுள் ஒன்று சைவம். சைவம் சிவன் வழிபாட்டு நெறி. சைவ சமயத்தினரின் இறைவன் சிவன். சிவன் பரம்பொருள் ஈசன். பிறப்பு இறப்பு இல்லாப் பெரியோன்.

சிவநெறியை நாளும் நாளும் தமிழ்வழி பரப்பிய சான்றோர் நால்வர் சைவ சமயக்குரவர் எனப்பட்டனர். நால்வருள்ளும் காலத்தால் பின்னையர் மாணிக்கவாசகர். திருவாதவூரர், ஆதிசைவ அந்தணர், தமிழ்மொழி, வடமொழிகளின் நிறைந்த புலமையர், சமய நூல் அறிவும், சிவ ஆகமப் பயிற்சியும் நிரம்பியவர்.

இறைவன், வையை ஆற்றிலே நீர் பெருகச் செய்ததும், பிட்டுக்காக மண்சுமந்ததும், பாண்டிய மன்னர்பால் பிரம்படிபட்டதும், நரிகளைப் பரி ஆக்கியதும், ஆன திரு அருள் விளையாடல்களை எல்லாம் மாணிக்க வாசகர் பொருட்டே நிகழ்த்தினார். மாணிக்க வாசகர் இறைவன் திருப்பெருந்துறையில் ஞான ஆசிரியனாகக் எழுந்தருளிய காட்சியைக் கண்குளிரக் கண்டு, உள்ளம் உருகிப் பாடிய பாடல்களே திருவாசகம். அவர் தம் மெய்யுணர்வில் பொங்கிய பேரன்பில், ஆண்டவனைக் கண்டும், அனுபவித்தும் கற்பார் உள்ளம் உருகப் பாடிய பாடல்கள் அவை.

இறைவனைக், குருவாய் மெய்யுணர்வில் உணர்ந்து, உணர்ந்ததை உலகிற்கு உணர்த்திய பெருமகனைக் குழந்தையாய் எண்ணிப் பிள்ளைத் தமிழ் பாடியுள்ளார். முன்னாள் சன்மார்க்க சபை மாணவர் திருமிகு. முனைவர் மூ.அங்கப்பன் அவர்கள். அவர் கவிதைகள் மாணிக்க வாசகருக்கும் தனக்கும் உள்ள அனுபவ உண்மைகளாகவே அமைந்தவை.

'வாதவூர் வள்ளல் பிள்ளைத்தமிழ்' என்ற இனிமையான தமிழ்ச் சிற்றிலக்கியம் மாணிக்கவாசகரின் சைவப்பணி, தமிழ்ப்பணி இரண்டின் பெருமையையும் பொருத்தமுற, அழகாய்ப் பாடியுள்ளது. ஆசிரியருக்குப் பாராட்டுக்கள்.

படிப்போர் மனமகிழ்ந்து போற்றுவாராக.

அன்புடன்
**அ.சாமிநாதன்** பி.ஏ.,

**முனைவர் க.கனகராசு**
முதல்வர் (பொ)
கணேசர் கலை அறிவியல் கல்லூரி, மேலைச்சிவபுரி




வாதவூர் வள்ளல் பிள்ளைத் தமிழ் என்ற ஒரு அருமையான நூலை யாத்துள்ளார். மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க் கல்லூரியின் முன்னாள் மாணவர் திருமிகு முனைவர் மூ.அங்கப்பன் அவர்கள். ''குழவி மருங்கினும் கிழவதாகும்'' என்ற தொல்காப்பிய நூற்பா, கண்ணனைப் பிள்ளையாகப் பாவித்துப் பெரியாழ்வாரைப் பாசுரங்கள் பாடவைத்தது. அதுவே பிற்காலத்து ''பிள்ளைத் தமிழ்'' என்னும் இலக்கிய வகைமையாக உருப்பெற்றது.

தான் விரும்பும் பாட்டுடைத் தலைவரைக் குழந்தையாகப் பாவித்துக் காப்பு முதலாகப் பத்துப் பருவங்களாகப் பாடப்படுவது பிள்ளைத் தமிழ் இலக்கிய வகை.

மாணிக்க வாசகர் பிள்ளைத் தமிழில் அமைந்தவை எளிமையான சொற்கள், வளமான சொற்றொடர்கள், இனிமையான கவிதைகள், ஆசிரியரின் சைவ நெறிப் பற்றையும், உலகியல் அறிவையும் வளமாகவும், நலமாகவும் தேவைக்கு ஏற்ற வகையில் புலப்படுத்துவன.

காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, வருகை, முத்தம், அம்புலி, சிற்றில் சிதைத்தல், சிறுபறை அறைதல், சிறுதேர் உருட்டல் என்ற பத்துப் பருவங்களால், பருவத்திற்குப் பத்துப் பாடல்கள் வீதம் நூறு பாடல்களால் இவ்வழகிய நூல் ஆக்கப் பெற்றுள்ளது.

திருவாசகம் போன்றதொரு ஞானநூல் வேறு எம்மொழியிலும் இல்லை என்றே கூறலாம். காரணம், நாடு நகர வருணனைகள் ஏதுமின்றி முழுமையும் இறைவனுக்கும் வாதவூரருக்கும் உரிய தொடர்பை மட்டுமே பேசுவது. அதுபோலவே பிள்ளைத் தமிழும் பெரும்பாராட்டிற்கு உரியது. ஆசிரியர் நூல் முழுமையும் வெற்றுச்

சுவைகளுக்கு இடம் தராது. இது ஆன்ம நூல் என்பதை மனதில் தேக்கி, தமக்கும் வாசகரின் வாழ்வு மற்றும் வாக்கு இவைகளில் தோய்ந்த தன் மனத்தையே புலப்படுத்துகின்றார்.

பருவங்கள் தோறும் இவர் செய்த பல புதுமை,கற்பதற்கு ஏற்ற வகையில் அமைவதோடு மகிழ்வையும் தருகிறது. உதாரணத்திற்கு காப்புப் பருவத்தில் மாணிக்கவாசகக் குழந்தையைக் காப்பாற்றத் தமிழ்த்தாயை வேண்டுவதோடு, தமிழ்க்கவி இளங்கோவால் தெய்வமாக்கப்பட்ட கற்புக் கூடம் பூண்ட பொற்புடைத் தெய்வமாகிய கண்ணகியையும் வணங்குதலைக் கூறலாம்.

இறை அனுபவமே திருவாசகம் என்பதை ஆசிரியரின் செங்கீரைப் பருவத்தின் அனைத்துப் பாடல்களிலும் அமைந்த

''சிவசிந்தை இமைப்போதும் அகலாத தவயோகி
செங்கீரை ஆடியருளே'' என்ற அடியால் தெளியலாம்.

சிவபெருமானின் வீரட்டானச் செய்திகளும் மாலும் அயனும் அடிமுடி காண முடியாத பெருமையும் பல இடங்களில் பொருத்த முற அமைக்கப்பட்டுள்ளன.

பிள்ளைத் தமிழ் இலக்கியத்திற்குப் பெரும்சிறப்பு செய்வது அம்புலிப் பருவம். சாம பேத தான தண்டம் என்ற அமைப்பில் நிலவோடு குழவியை இணைத்துப் பாடப்பெறும் பகுதியது. குழந்தையின் பதினான்காம் பதினைந்ததாம் திங்களில் நிகழ்வதாகப் பாடப்பெறுவது. இப்பருவ முதல் பாடலில் இறைவன் ''பட்டமங்கலம்'' என்ற ஊரில் குருவாய் எழுந்தருளி இருக்கும் காட்சி அழகுறப் பாடப்பட்டுள்ளது.

''பட்ட மரம் தழைக்கக் கெட்ட நிலம் பிழைக்கப்
பகர் திருவாசகம்''

என்று திருவாசகப் பெருமை பேசப்படுகிறது.

அனைத்துப் பாடல்களுமே இனிய சந்தத்துடன், எளிய நடையில் ஓசை நயத்தோடு பாடப்பட்டுள்ளன. ''ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்'' என்பது போல் கீழ்க்காணும் அம்புலிப்பருவப் பாடலைக் கூறலாம்.

''வேகாத காலென்று யோகத்தில் நின்றவர்கள் வெகுகாலம்
மூச்சடக்கி
விறல்மிக்க வீரர்களாம் ஐம்புல வேடர்களை வென்றனர்
என்றுரைப்பர்

மாகாதல் கொண்டதால் ரோகிணியின் தந்தையார் வழங்கிய
சாபம்போக்க
வணங்கிய சோமனே உன்னைத் தலையிலே வைத்து
வளர்கென்ற சொக்கர்
போகாத மும்மலப் பொல்லா அரக்கர்களைப் புன்சிரிப்
பொன்றதாலே
பொசுக்கினார் என்றாலும் பொன்னூசல் பாடலுக்காய்ப்
புண்பட்டார் மண்சுமந்துமே
ஆகாய வீதியில் ஆடியது போதும் நீ அருள்வாத வூரிறைவன்
அன்போ டழைத்தனன். மறுக்காமல் மறக்காமல் அம்புலீ
ஆடவருக.''

என்பது நல்ல எதுகை மோனை முதலிய அழகிய தொடைகள் அமைந்தது. இறைவன் பிறை சூடிய வரலாற்றைப் பேசுவது.

திருவாசகத்தின் எல்லா பாடல்களும் நுட்பம் வாய்ந்தவை என்றாலும் திருவெம்பாவைக்கென்று தனிச் சிறப்புண்டு. வயதொத்த இளம்மங்கையர் மார்கழித் திங்களில் இறைவனை வேண்டித் தவம் செய்வது. இப்பகுதி பிள்ளைத் தமிழ் ஆசிரியரையும் பெரிதும் ஈர்த்துள்ளது இந்நூலில் காணமுடிகிறது.

''உன்னடியார் தாள்பணிவோம் அன்னவர்க்கே பாங்காவோம்
அன்னவரே எம் கணவராவார்''

என்பது பாவை நோன்பு நோற்கும் பெண்களின் உளக்குறிப்பு. இப்பகுதி முழுமையும் வற்றா இருப்பாகிய, பேராற்றலாகிய இறைவனின் உள்ளம் உவக்கச் செய்த மாணிக்கவாசகர் பிள்ளைத் தமிழில் ''சிற்றில் சிதையேல்'' பகுதியில் கவினுற ஆக்கப் பெற்றுள்ளது.

சொற்களும் சொற்றொடர்களும் இனிமைப் பண்பு மிக்கன. பொருள் நுட்பங்களோ நினைக்க நினைக்க ஆழ்ந்து செல்லும் இயல்பின.

''விழிக்கின்ற போதிலும் நின்பெயர் கூறுவோம் விடியலில் பாவை
படிப்போம்
''விண்ணகத் தேவரும் நண்ணவும் மாட்டாத விரும்பொருள்
உனைப் பரவுவோம்
அழுகின்ற போதிலும் அற்புதப் பத்தினை அழகாகப் பாடி
அழுவோம்

ஆனந்த மாலையில் நீ கண்ட காட்சியை அடியோங்கள் காண
விழைவோம்
தொழுகின்ற தூயராய் நேயராய்ச் சேயர்கள் தொழுகுலம்
அமைக்க லுற்றே
தூமணல் தெள்ளினோம் அள்ளினோம் திருவிடத்தைத்
தூவினோம், கோலமிட்டோம்.
எழுகின்ற பிற்பெல்லாம் உமக்கே நாம் பணி செய்வோம் எம்பிரான்
தொழுது வாழ்வோம்
ஏழையேம் ! மலர்போன்ற விரல்களால் ஆக்கினோம் ஏந்தலே !

என்ற பாடல் மேலைத் திருவாசக வரிகளோடு ஒப்புக் காணத்தக்கது.

இதில் இறைவனின் பெருமைகள், மாணிக்கவாசகர் சிறப்புகள், இறையறிவு அடிதோறும் அடிதோறும் கவினுறக் கட்டமைக்கப்பட்டுள்ளன.

மொத்தத்தில் பிள்ளைத் தமிழாசிரியர் பாடல்தோறும் பருவங்கள் தோறும் புதுமைகள் செய்துள்ளார். எளிமையாய் யாத்துள்ளார். மாணிக்கவாசகர் வாழ்வு, திருவாசகம் இரண்டிலும் மனம் தோய்ந்து, ஆழ்ந்து, கனிந்து, பொங்கி நின்ற உணர்வுகளால் ஒவ்வொரு பாடலினுள்ளும் அழகியல் ததும்பப் ''பிள்ளைத்தமிழ்'' நூல் செய்துள்ளார். சிவனருட் செல்வர்கள் ஒவ்வொருவரும் திருமுறையைப் போல் மனத்துள் பாதுகாக்க விரும்பும் கனிச்சாறு. சிவனடியார்களுக்கு இது ஒரு வரப்பிரசாதம். இதன் அழகியல் நுட்பம் விரிப்பின் பெருகும்.

இறைவன் வற்றா இருப்பு, பேரருள், மறைபொருள், மறைபொருளாம் இறைவனை அறிய மெய்யறிவு வேண்டும். மாணிக்கவாசகரின் மெய்யுணர்வின் வெளிப்பாடு ஆகிய திருவாசகத்தேன் அனைய ''வாதவூர் வள்ளல் பிள்ளைத்தமிழ்'' நூல் முழுதும் ஆசிரியரின் மெய்யுணர்வு புலப்படுகிறது. இந்த நூலைப் படிப்பவரும் மெய்யறிவைப் பெற்று இறைநிலையைத் தம் ஆழ்மனத்தே உணர்வார்கள் என்பது என் துணிவு. இருபத்தோராம் நூற்றாண்டில் இப்படியொரு வாழ்வியல் நுட்பம் சார்ந்த அருமையான இறையறிவு நூலைத்தந்த ஆசிரியருக்குப் பாராட்டுக்கள்.

இந்நூலை வாசிக்கவும், இறைபற்றிய கருத்துக்களை ஒரு சிறிதே சுவாசிக்கவும் எனக்குக் கிடைத்த வாய்ப்பை என் முன்னோர் செய்த தவப்பேறாய் உணர்கின்றேன். நன்றி.

அன்புள்ள

**முனைவர் க.கனகராசு**

**மு. திருநாவுக்கரசு**
தலைவர், முன்னாள் மாணவர் சங்கம்
கணேசர் கலை அறிவியல் கல்லூரி, மேலைச்சிவபுரி



# வாழ்த்துரை

திருவாதவூரிலே பிறந்து, மதுரை மண்ணிலே சிவபெருமானின் அருளாசியுடன் சைவ சமயத்தை வளர்த்து, மக்களுக்கு நாளும் இன்னிசையால் தொண்டு செய்த சைவசமயக் குரவரான திருவாசகம் அருளிய மாணிக்கவாசகரைக் குழந்தையாகப் பாவனை செய்து பாடிய 'பிள்ளைத்தமிழ்' கருத்தாழம் மிக்க படைப்பாக அமைந்துள்ளது.

'சைவமும் தமிழும் தழைத்து இனிது ஓங்குக' எனும் கொள்கையுடன் நூறாண்டுகளைக் கடந்து தமிழ்ப்பணியையும், சைவப் பணியையும் ஆற்றிவரும் இன்றைய கணேசர் கலை அறிவியல் கல்லூரியாகிய முந்தைய 'கணேசர் செந்தமிழ்க் கல்லூரியை' நிறுவிய சன்மார்க்க சபையில் கற்ற இந்நூலின் ஆசிரியர் தான் கற்ற புலமைச் சிறப்பையும், மாணிக்கவாசகர் விழாவைக் கொண்டாடி வரும் அம்மண்ணின் சிறப்பையும் வெளிப்படுத்தும் வண்ணம் இந்நூலை ஆக்கியுள்ளார்.

காலத்திற்கேற்ற கருத்துக்களையும், அவற்றை உவமை போன்ற அணி நயங்களால் விளக்கிய திறனும் பண்டையோர் இயற்றிய 'மரபை வழுவாமல் காத்த 'சிறப்பிற்குரியதாகின்றது. தமிழ் ஆர்வலர்களும், இலக்கியம் பயிலும் மாணவ, மாணவியரும் இந்நூலைக் கற்று மகிழ வேண்டும் ; பயன் பெறவேண்டும்.

அன்புடன்
**மு. திருநாவுக்கரசு**



**அ.கருப்பையா**
செயலர், முன்னாள் மாணவர் சங்கம்
கணேசர் செந்தமிழ்க் கல்லூரி, மேலைச் சிவபுரி

## வாழ்த்துப்பா

வாதவூர் அடிகள் தம்மை
    வாழுமோர் குழந்தை யாக்கி,
காதலால் கசிந்து, பிள்ளைக்
    கவியினை அளித்த ஆசான்
போதனை தமிழில் நல்கி
    புகழுடன் வாழச் செய்யும்
மாதவ மண்ணைப் போற்றி
    வளம்பெற வாழ்த்து கின்றேன்!

அன்புடன்
**அ.கருப்பையா**



முனைவர் **க.வீ.வேதநாயகம்**
மதிப்பியல் தலைவர்
தமிழகத் தமிழாசிரியர் கழகம்
கணக்கம்பாளையம், ஈரோடு மாவட்டம்.
அலைபேசி : 94434 12819

## பதிப்புரை

முனைவர் மூ.அங்கப்பன் அழகு தமிழில் கவிதை படைக்கும் புலவர் ; மூவாத தமிழுக்குச் சொந்தக்காரர்.

மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க் கல்லூரியில் கால் வைத்த நாள்முதல் என் கண்முன் நிற்பவர், எமதுளத்தில் நிறைந்தவர். என்றும் எங்கும் எப்போதும் திருவாசகத்தைத் தம்முடன் வைத்திருப்பவர். இதனை

*"எலும்பை உருக்குமுன் வாசகத்தை*
*நன்றே படித்தேன்! அமுதினைக் குடித்தேன்*
*நரம்பும் எலும்பும் அதுவானேன்*
*நாதனே வாதவூர் வேதனே உன்றன்*
*நற்பெயர் பேசி நலமுற்றேன்"*

என்று அவர் பாடியுள்ள பாடல் மூலமே அறியலாம். அதனால் தான் தமது முனைவர் பட்ட ஆய்வுக்குத் "திருவாசகம் - இரட்சண்ய யாத்திரிகம்"எனும் தலைப்பைப் பொருளாக்கினார். சங்ககிரி சங்கர் மேல்நிலைப்பள்ளியில் 34 ஆண்டுகள் தமிழாசிரியராய்ப் பணியாற்றியவர். தம் பணிக்காலத்தில் பல்வேறு அனுபவங்கள் பட்டங்கள் பெற்றவர்"வினையிலே கிடந்தேன், துயரிலே சுழன்றேன் வீணருக்குழைத்து நொந்தேன். விடியலைக் காணேன்; விதிவலைப் பட்டேன்" எனத்தம் வாழ்க்கைச் சுவடுகளையும் பதிவு செய்துள்ளார். சிறந்த ஆன்மீகவாதி; தமிழ்ப்பேச்சாளர்; திருக்குறளையும் திருவாசகத்தையும் பல்வேறு ஊர்களில் பாமரரும் அறியும்படிப் பாங்காக உரைத்து வருபவர். திருவாதவூர் மாணிக்கவாசகர் திருக்கோவிலில் தமிழகச் சாதுக்கள்

இவருக்கு "மாணிக்கவாசகமணி" என்னும் பட்டம் வழங்கிச் சிறப்பித்தனர். கணக்கம்பாளையம் திருக்குறள் பேரவை "திருக்குறள் தென்றல் என்ற பட்டத்தை வழங்கிச் சிறப்பித்தது.

பணி நிறைவுற்ற வேளையிலும் நாளும் வாதவூர் வள்ளலையே நினைந்து, அவரையே பாடு பொருளாக்கி "வாதவூர் வள்ளல் பிள்ளைத்தமிழ் எனும் சிறந்த படைப்பை வழங்கியுள்ளார். திருவாசகத்தை அருளிய வள்ளலைப் புகழும் பாங்கு நனி சிறந்தது.

*"எட்டோ ரிரண்டையும் அறியாதவன் என்றே*
*எப்படி உரைக்கலாம் நீ*
*எட்டாத நாதனைப் பற்றினைப் பிட்டினை*
*இடுகூலி ஏற்க வைத்தாய்"*

*"அமுதூறும் வாசகங்கள் அறுநூற்றைம்பதும்*
*அழுதழுது குழைந்து மேலாந்*
*தேவாதி தேவனை நாவாரப் பாடினோய்*
*செங்கீரை ஆடி யருளே!"*

எனப் புகழ்பாடும் பாக்களைப் படித்து மகிழலாம். புதுக்கவிதை கோலோச்சும் காலத்தில் மரபுக்கவிதையில் பிள்ளைத்தமிழ் என்றாலும் எல்லோரும் படித்து மகிழ்ந்து போற்றும் வகையில் கவிதைகளைப் படைத்துள்ளார். புரட்சியாகக் காப்புப் பருவத்தில் கண்ணகியையும் தெய்வமாக்கிக் காக்க வேண்டியுள்ளார்.

## அவரது சமுதாயப் பார்வை

*"தோற்றத்தில் துறவியாய் வாழ்க்கையில் பாவியாய்ச்*
*சுரண்டலில் கைதேர்ந்தவர்"*
*"கல்வியில் கபோதிகள் செல்வத்தில் குபேரர்கள்*
*கசடரைக் கண்டு கண்ணீர்க்*
*கடலிலே மூழ்கினேன்..."*

*"எங்கெங்கு பார்த்தாலும் அதர்மமே ஆடுமால்*
*ஏனிந்த நிலைமையென்றே*
*எண்ணியே தூயவர் குமைந்திட அழுதுமே*
*இருப்பதும் நன்றாகுமோ"*
*இவ்வாறு நூலாசிரியரின் ஏக்கங்கள் படைப்புப் பாடல்*
*தொடங்கிப் பல பாடல்களில் பேசப்படுகின்றன.*

**அறிவியல் பார்வை**

*ஆரா இயற்கை ஆசை கொண்டே*
*அமெரிக்கர் வந்தே வெட்டிடுவார்*
*ஆம்ஸ்ட்ராங் வந்தே காலில் மிதிப்பன்*
*அனேகர் வந்து இடம்பிடிப்பர்"*

என அம்புலிப்பருத்தில் நிலாவைப் பார்த்துப் பாடியுள்ளார்.

*சூரியக்கதிரில் சுழமும் துகளாய்த்*
*தோன்றும் கோடி விண்மீன்கள்*
*சூரியத் தாயைச் சேய் போல் சுற்றிச்*
*சூழும், நகரும் நவகோள்கள்... ஆம்*

வானியலின் தமது அறிவியல் பார்வையைப் பதிவு செய்துள்ளார்.

திருவாசகத்தின் ஒவ்வொரு பத்தின் மையக் கருத்தும் பாடுபொருளாகச் சுவைக்கத் தந்துள்ளார். சுவைத்த சுவை அதனை ஒவ்வொரு பாடலாகக் கூறினால் அதுவே தனி நூலாகும். எனவே சொல்நயம் பொருள்நயம் சந்தநயம் மிக்க இப்பிள்ளைத்தமிழ் நூலைச் சுவைத்து மகிழுங்கள்.

அன்பன்

**க.வீ.வேதநாயகம்**






பேரன்புசான்றீர் வணக்கம் !

சன்மார்க்க சபையில் தமிழ் பயின்ற காலம் என் வாழ்வில் பொற்காலம் ! அங்கே தான் தமிழின் மேலாந்தர நூல்களைக் கற்க நேர்ந்தது. சான்றோர் பலரைச் சந்திக்க முடிந்தது ; பண்புடைய பலரோடு பழகும் வாய்ப்புக் கிட்டியது. தினம் ஒரு திருவாசகப் பாடல் என்று மனப்பாடம் செய்ய உறுதி எடுத்து, அந்நூலிலே ஊறியதுண்டு. மாணிக்கவாசகர் சென்று வழிபட்ட தலங்கள் எல்லாம் சென்று தரிசிக்கும் வாய்ப்புப் பின்னாளில் கிடைக்கப் பெற்றேன். திருவாசக ஆய்வேட்டினைப் பல தலங்களில் வைத்துப் பணிந்தேன். மாணிக்கவாசகர் மீது பிள்ளைத் தமிழ் பாடும் வாய்ப்பினை இயற்கை எனக்கு ஏற்படுத்தித் தந்தது. துன்பத்திலும் இன்பத்திலும் தோய்ந்தேன். தமிழ்த்தாய் கைகொடுக்க, நண்பர்கள் ஊக்குவிக்க, இந்நூலை இயற்றினேன். இறையருளுக்கு என் நன்றி மலர்களைக் காணிக்கை ஆக்குகிறேன்.

ஆய்வியல் அறிஞர்; தமிழின் துறைதோறும் நுழைத்துத் தோய்ந்த முனைவர் தமிழண்ணல் ஐயா அவர்கள் என் பிள்ளைத் தமிழுக்கு அணிந்துரை தந்துள்ளது என் தவப்பேறே ! இந்நூலுக்கு ஆய்வுரை வழங்கியருளிய தமிழ்ச்சான்றோர் திருமிகு. முனைவர் க.கனகராசு, முதல்வர்(பொ), கணேசர் கலை அறிவியல் கல்லூரி, மேலைச்சிவபுரி அவர்களுக்கு என் நன்றியினைக் கூறுவதில் பெருமை கொள்கிறேன்.

மேலும் என்னை இப்பணியில் ஊக்குவிக்க வேண்டுமென்ற உண்மை உணர்வோடு வாழ்த்துரை வழங்கிய திரு.பாசா.சிங்காரம் செட்டியார், தலைவர், சன்மார்க்க சபை மேலைச்சிவபுரி அவர்களுக்கும், திரு. சி.நாகப்பன், எம்.பி.ஏ., தலைவர், கல்லூரிக்குழு, கணேசர் கலை அறிவியல் கல்லூரி, மேலைச்சிவபுரி அவர்களுக்கும், திரு. அ.சாமிநாதன் பி.ஏ., செயலர், கல்லூரிக் குழு, கணேசர் கலை அறிவியல் கல்லூரி, மேலைச்சிவபுரி அவர்களுக்கும், என் உளங்கனிந்த நன்றியினைக் கூறிக் கொள்வது என் தலையாயக் கடனாகக் கருதுகிறேன்.

முனைவர் பட்டத்திற்கு ஆய்வு செய்யும் காலம் முதல் என்னெஞ்சில் நிறைந்தும், நிழலாகத் தொடர்ந்தும் வருபவர் முனைவர் க.வீ.வேதநாயகம், மதிப்பியல் தலைவர், தமிழகத் தமிழாசிரியர் கழகம் அவர்கள் இந்நூலைத் தம் பதிப்பகத்தில் வெளியிட்டு உதவினார். அவர்களுக்கும் என் கனிவான நன்றி ! அவரின் உதவி அளப்பரிது.

திரு. மு.திருநாவுக்கரசு, தலைவர் முன்னாள் மாணவர் சங்கம், கணேசர் செந்தமிழ்க் கல்லூரி, மேலைச்சிவபுரி அவர்கள் இனிய பண்பினர், உளமொத்த நண்பர். திரு. அ.கருப்பையா, செயலர், முன்னாள் மாணவர் சங்கம், கணேசர் செந்தமிழ்க் கல்லூரி, மேலைச்சிவபுரி இருவரும் இந்நூல் நான் படித்த கல்லூரியில் அரங்கேற்றி வெளியிட ஆவன செய்த அருளாளர்கள். அவர்களின் துணையின்றேல் அணிந்துரைகள், அறிஞர் பலரிடமிருந்து கிடைக்கப் பெறும் வாய்ப்பினை இழந்திருப்பேன். இருவருக்கும் என் நன்றி !

சிறந்த முறையில் கணினி அச்சு செய்து உதவிய கள்ளிப்பட்டி ருத்ரா கணினி மையப் பொறுப்பாளர் ருத்திரமூர்த்திக்கும், சிறந்த முறையில் அச்சிட்டு நூலை வடிவமைத்து அழகு பெறச் செய்த ஈரோடு ‘ஜெம் ’ அச்சகத்திற்கும் எனது நன்றி உரித்தாகும்.

எல்லாவற்றிக்கும் மேலாக, என்னுள்ளிருந்து, சொற்களைத் தந்து, பாடலாக்கிக் கொண்ட தெய்வத்தமிழுக்கு என் வணக்கமும் நன்றியும்.

‘‘சாட்டி நிற்கும் அண்டமெலாம்
சாட்டையிலாப் பம்பரம்போல்’’
ஆட்டிவைக்கும் அருட்பெருஞ்சோதி
ஆண்டவரின் தாளிணைப் பணிந்து

இந்நூலைத் தமிழர்களின் திருக்கரங்களில் தருகின்றேன் !

குற்றங்கள் என்னுடையவை !
சிறப்புக்கள் தெய்வம் தந்தவை !

அன்புடன்

**மூ. அங்கப்பன்**
முதல்வர், வித்யாசாகர் கல்வியியல் கல்லூரி
சங்ககரி, சேலம்.

# உள்ளே.....

## வேந்தன்பட்டி – நெய்நந்தி விருத்தம்

<u>காப்பு:-</u>

"ஒருகோ டிருசெவி மூன்றுகண் நால்வாய்க்
கருவயிறன் காத்தல் கடன்"

<u>பயன்:-</u>

1. எல்லா நலமும் இனிதே பெறுவதுடன்
பொல்லா வினையகலப் பூரிப்பர் - நல்லார்வாழ்
பாங்கான வேந்தைப் பதிநந்திப் பாஓதின்
தீங்கின்றி வாழ்வார் சிறந்து.

2. நெய்க்கடலில் நீந்துகின்ற நீள்நந்தி தாள்தொழுதால்
வையகத்தே நல்வாய்ப்பு வந்திடுங்காண்- பொய்யில்லை
அல்லல் கடல்நீந்தி ஆனந்தம் கண்டிடலாம்
இல்லையே தொல்லை இனி.

## நந்தி விருத்தம்

1. பல்வளமும் சூழுகின்ற பறம்புமலை நாடு
பாரிபுகழ் முல்லைமணம் பரவுகின்ற நாடு
இல்வளமும் சொல்நலமும் இலங்குதிரு நாடு
ஏர்வளமும், போர்மறமும் இனிதிலங்கு நாடு
வல்லவராய் வாழ்வோர்கள் வாய்ப்புகளைக் காண
வையத்தார் எல்லோரும் பெற்றோரைப் பேண
நல்லவர்கள் வாழுகின்ற வேந்தை நகர்க்கோனே!
நல்லவழி விடவேண்டும் நந்திபெரு மானே!

2. பெற்றவர்கள் பிள்ளைகளைப் பேணமறந்தாலும்
பிள்ளைகளும் பெற்றோர்தாள் பூண மறந்தாலும்
கற்றவர்கள் அறநெறியை மதிக்க மறந்தாலும்
காரிகையர் கணவனையே துதிக்க மறந்தாலும்
கொற்றவர்கள் நல்லாட்சி நடத்த மறந்தாலும்
குடிமக்கள் அறவழியில் நடக்க மறந்தாலும்
நற்றவர்கள் வாழுகின்ற வேந்தை நகர்க் கோனே
நல்லவழி விடவேண்டும் நந்திபெரு மானே!

3. கற்புடைய மங்கையர்கள் உலவுதிரு நாடு
கபிலரெனும் தெய்வீகப் புலவரது நாடு
அற்புடைய குடிகளொடு அறம் வளரும் நாடு
அறிஞர்களும் கலைஞர்களும் அவதரிக்கும் நாடு
பற்பலவாய்க் கோவில், கலை, பக்திவளர் நாடு
பாரனைத்தும் வந்தாலும் விருந்தோம்பும் நாடு
நற்கொடைஞர் வாழுகின்ற வேந்தைநகர்க் கோனே!
நல்லவழி விட வேண்டும் நந்திபெரு மானே!

4. படமுடியா தினித்துயரம் படமுடியா தரசே!
பட்டதெல்லாம் போதுமென அறைகின்றேன் முரசே!
உடலெல்லாம் அடிபட்டு முறிந்தாலும் நீயே
உற்றதுணை எனக்கில்லை துதிக்கின்றேன் தாயே
விடமாட்டேன் நினதடியை அன்றுமுதல் நானே!
வேண்டுவன நீயறிவாய்! ஈக அருள்தானே!
நடமாட்டேன் உனையன்றி வேந்தைநகர்க் கோனே!
நல்லவழி விடவேண்டும் நந்திபெரு மானே!

5. பாட்டரசன் நானாக மாறிடவும் இல்லை
பாரெல்லாம் எனது புகழ் பரவிடவும் இல்லை
ஆட்டரசன் ஊர்ந்து வரும் பேறு பெற்ற ஞானி
அன்பர்களைக் கரையேற்றும் நெய்க்கடலின் தோணி
வீட்டரச னாகஇங்கே இருந்துவிட லாமோ
வேலை செய்ய விழைவோரைத் தேம்பவிடலாமோ
நாட்டரசர் வாழுகின்ற வேந்தைநகர்க் கோனே!
நல்லவழி விடவேண்டும் நந்திபெரு மானே!

6. முன்னைவினை யாவையென முழுதுமறிந்திலனே!
மூளும்வினை யாவையென முற்றுமுணர்ந்திலனே!
பின்னைவினை யாதுசெய்யும் பேதையறி யேனே!
பேரறிவும் மூத்தறிவும் கற்றுமுணரேனே!
என்னையினும் என்செய்ய எண்ணியுளாய் நீதான்
இமைப்பொழுதும் உன்னடியை மறந்தறியேன் நான்தான்
நன்மைஎலாம் விளங்குகிற வேந்தைநகர்க் கோனே!
நல்லவழி விடவேண்டும் நந்திபெரு மானே!

7. பூவலரும் தேனொழுகும் சோலைகளும் சூழும்
பூந்துணரில் தேன்வண்டு பகலிரவாய் வாழும்
பாவலர்கள் வள்ளல்களைப் பாடிமகிழ் வார்கள்
பாரிவழி வந்தவர்கள் ஈந்துகளிப் பார்கள்
ஏவலர்கள் குறிப்பறிந்து கடமைகளைச் செய்வர்
இரவலரும் புரவலரும் குறள்வழியில் செல்வர்
நாவலர்கள் வாழுகின்ற வேந்தைநகர்க் கோனே!
நல்லவழி விட வேண்டும் நந்திபெரு மானே!

8. நீதிநெறி எந்நாளும் நிலவு வேந்தன் பட்டி
நெய்மணக்கும் வீடெல்லாம் பண்பாட்டின் தொட்டி
பாதிவழி வந்திடையில் கைவிடுவார் இல்லை
பாண்டியனார் பறம்பினைப் போல் பாரில்மலை இல்லை
ஆதிமுதல் வாணிபத்தில் எந்நாடும் செல்வர்
அனைவரையும் உறவாக்கிஅ ன்பாலே வெல்வர்
நாதியிலார் இல்லாத வேந்தை நகர்க் கோனே!
நல்லவழி விட வேண்டும் நந்திபெருமானே!

9. பூமகளும் இந்நாட்டில் நன்றாக விளைவார்
புஞ்செயுளார் அரசனெனக் களைகளையே களைவார்
மாமரங்கள் கனிகொடுக்கும் குயிலமர்ந்து கூவும்
மருது, மா, தென்னையிலே கவிக்குலங்கள் தாவும்
பூமரங்கள், செடிகொடிகள் மலரீந்து களிக்கும்
புரிசையிலே ஆடுகொடி விருந்தினரை அழைக்கும்
நாமகளார் மகிழ்ந்துறையும் வேந்தைநகர்க் கோனே!
நல்லவழி விட வேண்டும் நந்திபெருமானே!

10. தாரகமாய் இந்நாட்டில் நன்னெறிகள் ஓங்கச்
சன்மார்க்கம் தவிர்த்தபிற புன்மார்க்கம் நீங்க
ஈரமிகு நெஞ்சினரே இந்நாட்டை ஆள
இராக்கதமும், கொலைவெறியும் பகையுணர்வும் மாள
வீரத்திலும் உயிரிரக்கம் மக்களிடம் பூக்க
வேந்தர்களும் நாடுகளும் நல்லறத்தைக் காக்க
நாரதர்போல் இசைஞருறை வேந்தை நகர்க் கோனே!
நல்ல வழி விடவேண்டும் நந்திபெரு மானே!

# படைப்பு

தமிழுணர் வில்லை, தமிழறிவில்லை
தமிழர்கள் யாருமில்லை
தமிழுணர் வோடு தமிழறிந்தோரைத்
தமிழர்கள் மதிப்பதில்லை
அமிழ்தினும் இனிய தமிழினில் இல்லா
அறிவியல் எங்குமில்லை
அகத்துறை, புறத்துறை தத்துவப்படிகள்
அகிலத்தில் தோன்றவில்லை
தமிழனுக் கெதிரி தமிழனே யன்றித்
தரணியில் யாருமில்லை
தமிழினில் உள்ள மேலான நூல்களைத்
தமிழனே கற்பதில்லை
தமிழனே நீதான் தன்னிலை உணரத்
தருணம் விழித்தல் நன்றே
தமிழமு துண்க! தமிழமு துண்க
தந்தனன் தமிழருக் கின்றே!

## அவையடக்கம்

அகத்தியர், காப்பியர், ஔவையார், வள்ளுவர்
அந்தணக் கபிலர், பரணர்,
அன்னை நச்செள்ளை, நக்கீரர் பொன்முடி
கௌதமர், இளங்கோவுடன்
இகத்திலே புகழ்பெற்ற இறையனார் சாத்தனார்
ஏற்றமிகு பூங்குன்றனார்
இறவாத புகழ்கொண்ட கம்பநாடர், தேவர்
சேக்கிழார், பரஞ்சோதியார்,
மகத்துவக் குருபரர், பாரதி, கவிமணி
மன்புகழ் தாசர் இருவர்
மறைத்தமிழ் நால்வரோடு ஆழ்வார்கள் வரிசையில்
வருகின்ற தகுதியில்லேன்
அகத்திலே எரிகின்ற தமிழுணர்வதனாலே
அறிவிலாச் சிறுநாயினேன்
ஆசையாய்ப் பிதற்றிய பாடலென்றாலும் பொருள்
அறிவோர்கள் ஏற்பரன்றே!

## அவையடக்கம்

அகத்தியர், தொல்காப்பியர், ஔவையார், திருவள்ளுவர், கபிலர், பரணர், நச்செள்ளை, நக்கீரர், பொன்முடியார், கௌதமர், இளங்கோ, இறையனார், சாத்தனார், பூங்குன்றனார், கம்பர், திருத்தக்க தேவர், சேக்கிழார், பரஞ்சோதியார், குமரகுருபரர், பாரதியார், கவிமணி, பாரதிதாசன், கண்ணதாசன், சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், ஆழ்வார்கள் பன்னிருவர் என வரும் தமிழ்ப்புலவர்கள் வரிசையில் நிற்கின்ற தகுதி எனக்கில்லை. தமிழுணர்வால் இந்நூலை யாத்துள்ளேன். நூற்சிறப்பறிவோர் இந்நூலை ஏற்பர்.

## "தமிழ் வணக்கம்"

"பூமாது போற்றும் புனித மொழியடியில்
பாமாலை சூட்டிப் பணிகின்றேன்-காம
மனக்கவலை தீர்க்கும் மறைமொழியான
தனக்குவமை இல்லாத் தமிழ்"

"நீயே முதலாவாய்! நின்குறளே நேரியதாம்!
தாயே நினது குரல் தாரணியாம்-வாயால்
வழுத்துவதும் நின்னடியே! வாழ்த்துவதும் உன்றன்
பழுத்த இலக்கியத்தேன் பார்!

"தேன் சிந்தும் வாசகத்தைச் செய்ய திருவடியில்
ஊன் கலந் துட்கலந்தூற்றினனே!-வான்கலந்த
வாதவூர் வள்ளல் மணிவாசகத் தமிழ்
தீதறவே முற்றுவிக்கச் செய்"

பூவுலகம் முழுவதும் போற்றுகின்ற புனித மொழியாகிய தமிழ் மொழியின் திருவடிகளில், இந்தப் பாமாலையைச் சூட்டிப் பணிகின்றேன். ஏனெனில் ஆசைமிகு மனத்தின் கவலைகளைத் தீர்க்கும் வேத மொழியானதும், தனக்கு ஒப்பு இல்லாததும் தமிழ் மொழியே ஆகும்.

தமிழே! நீதான் முதன் மொழி! திருக்குறளே சிறந்த நூல்! நின் குரலே உலகம்!

உன்னை, உன்னடியை வாழ்த்தி உன் இலக்கியங்களையே போற்றுவேன்.

மாணிக்க வாசகர் தேன் சிந்தும் திருவாசகத்தில் உன்னடியில் ஊன் கலந்து, உயிர் கலந்து பாடிச் சூட்டினார். அவர் மீது பாடும் பிள்ளைத்தமிழ் சிறப்பாக முழுமை பெறத் துணைசெய்வாயாக.

# 1. காப்புப் பருவம்

காப்புப் பருவம் பிள்ளைத் தமிழின் முதற்பருவம். பாட்டுடைத் தலைவனைச் சேயாக்கி, அக்குழவியைக் காக்கவெனப் பிற கடவுளரை வேண்டுவதாக இப்பருவம் அமையும். இது இரண்டாம், மூன்றாம் திங்களில் நிகழும்.

<u>கணபதி</u>

நாதாந்த வெளியிலே நடமாடும் சோதியை
நானிலம் போற்றும் எழிலை
நண்ணினார் யாவர்க்கும் அருளமு தினிதீந்தே
நன்னெறி உய்க்கும் திருவை
வேதாந்த அந்தணன் அகத்தியன் முதலாக
வணங்கிடும் ஞான மணியை
வித்தர்கள், சித்தர்கள் முத்தர்கள் யாவரும்
வீழ்ந்தடி துதிக்கும் மதியை
ஓதாதே உணர்ந்திட மெய்கண்ட தேவர்க்கும்
உயர்ஞானம் அளித்த குருவை
ஓங்கார உருவனைப் பாங்கான கலையனை
ஓவாமல் ஏத்துகின்றேன்!
வாதவூர் வள்ளலைத் தீதிலாச் செம்மலை
மாநிலம் போற்றும் மகவை
மாதவச் சேயினைக் கோதிலா ஞானியை
மடியேந்திக் காக்கவென்றே!

வெட்ட வெளியில் சோதியாக விளங்கிடும் அழகை வணங்கினோரை உயர்த்தும் திருவை அகத்தியர், சித்தர்கள், முத்தர்கள் துதிக்கும் அறிவை மெய்கண்ட தேவர்க்கும் கலைஞானம் உணர்த்திய ஓங்கார உருவனாகிய கணபதியை வணங்குகிறேன். வாதவூர் வள்ளலை மடியேந்திக் காக்கவேண்டி !1

## சிவபெருமான்

மதியணி சூடியை, உயிர்த் தொகைக் காதியை
மங்கையொரு பாதியுருவை
வானதிப் பெருக்கினைத் தலையிலே தாங்கிய
வளர்கங்கை அமர்ந்த முடியை
விதிகளுக் கெல்லாம் விதி வகுக்கின்ற வொரு
வித்தகப் பாம்பாட்டியை
வேதனை, சாமகீதனைத் தமிழ்மறை
விளங்கும் திருப்பாதனைத்
துதி செய்யும் வானவர்கள், தானவர்கள், கானவர்கள்,
தொழுதிடும் சிவ சோதியைத்
துரியம் முதல் துரியா தீதம் வரை நின்று மேல்
துலங்கிடும் தூய இறையைக்
கதியென எண்ணியே திருவடி தொழுதுமே
கடிமலர் தூவி நிற்பாம்
ககனத்தில் கலந்தவனைக் கரைக்கும் மறைதந்தவனைக்
கண்போலக் காக்க வென்றே!

தில்லை வெளியே கலந்தவனும், திருவாசகத்தைத் தந்தவனுமாகிய மாணிக்க வாசகக் குழந்தையைக் காக்க வேண்டிப் பிறை சூடிய உமையொரு பாகனாக யோக நிலையில் தூரியத்தில் நிற்கின்ற வேதனாகிய சிவபெருமானை வணங்குகிறேன். 2

## பராசக்தி

சங்கமது வைத்துச் செந்தமிழ் கொழித்த நற்
தண்மணல் வைகை மூதூர்
தானாட்சி செய்துவரும் மீனாட்சி, சிவகாமி
தஞ்சை வளர் பெருநாயகி

துங்கமுறு கங்கை வளர் செங்கை தரு தங்கமணி
தூய விசாலாட்சியைத்
தூமறைகள் ஓதும் நல, மாதவர்கள் சூழவரு
தொல்காஞ்சிக் காமாட்சியை
அங்கமது தங்கமெனச் சிங்கமதில் தங்கியருள்
அகிலாண்ட மாதேவியை
ஐயாறு நாயகியைக் குற்றாலக் கோதையினை
அடிபோற்றி வேண்டுகிறேன்
வங்கமென நின்றருளிக் கங்குல் பகல் காத்தருளும்
வானமுதம் பொழிந்த கொண்டல்
மாதவனைப் பரி ஏற வைத்தவனை மாணிக்க
வாசகனைக் காக்கவென்றே!

சிவனையே பரி விற்கச் செய்த மாணிக்க வாசகனாம் குழந்தையைக் காக்க வேண்டி, மதுரையில் மீனாட்சியாகவும், தஞ்சையில் பெரியநாயகியாகவும், காசியில் விசாலாட்சியாகவும், காஞ்சியில் காமாட்சியாகவும், திருவையாறு, திருக்குற்றாலம் போன்ற திருப்பதிகளிலும் விளங்கும் பராசக்தியை வணங்குகின்றேன். 3

## கலைமகள்

கள்ளமே அறியார் உள்ளமாம் தூயநல்
கமலமாப் பூப்போதிலும்
கல்லினை உருக்கிடும் மெல்லிசை பெருக்கிடும்
கவின் வீணை, யாழ்மீதிலும்
வெள்ளமே என்னவே தெள்ளிய கவிதரு
வித்தகர், வேத கீதர்
வேதியர் பெருந்துறை நாயகர் வாதவூர்
விரகர் திருவாசகத்தை

உள்ளமே நிரம்பவே மெய்ம்மயிர் அரும்பவே
ஓதுவார் உளமீதிலும்
உயர்கோவை ஓதியே துயர்துன்பம் போக்கிடும்
உயர் பிறப்பாளர் மீதும்
உள்ளொளி மேவியே தெள்ளறி வீந்திடும்
உயர்தெய்வ ஞானமகளே!
உன்னடி பணிகுவன், பொன்மணி வாசகனை
உவந்துமே காக்கவென்றே!

மாணிக்க வாசகராகிய திருக்குழவியைக் காக்க வேண்டி, கள்ள மற்றார் நெஞ்சிலும், இசைக் கருவிகளிலும், வேதியர் நாவிலும் திருவாசகம் ஓதுவார் மனதிலும் உறைந்து ஒளிரும் கலைமகளை வேண்டுகிறேன். **4**

## முருகன்

முருகாற்றுப் படைதர நக்கீரப் புலவனைச்
சிறை வீடு செய்த முருகன்
முத்தமிழ்க் கந்த புராணத்தின் பிழைகளைத்
திருத்திக் கொடுத்த புலவன்
அருமறைக் கருவான ஓங்காரப் பொருளினை
அயன் அரன் உணரச் செய்தோன்
ஆதியாம் சக்தியிடம் ஞானமாம் வேல் கொண்ட
ஆற்றலன் சாமிநாதன்
திருப்புகழ்ப் பாட்டிற்காய் அருணை முனி சாகாமல்
திருக்கரம் ஏந்திக் காத்தோன்
செந்தமிழ்ப் பாட்டியின் புலமையைச் சோதித்தே
தேன்பாடல் பாட வைத்தோன்

விருப்போடு பன்னிரு திருமுறைகள் தன் மீதும்
விளங்கிடப் படைத்துக் கொண்டேன்
வேலனாம் முருகனை வணங்குவன் வாதவூர்
வேதனைக் காக்கவென்றே!

வாதவூர் வேதனைக் காக்கும்படி, நக்கீரனைச் சிறைமீட்டவனும், கந்தபுராணத்தைத் திருத்தித் தந்தவனும், ஓங்காரத்தின் உட்பொருளைச் சிவனுக்கும் பிரம்மாவிற்கும் உரைத்தவனும், பராசக்தியிடம் ஞானவேல் கொண்டவனும், அருணகிரியைக் காத்தவனும், ஔவையைச் சோதித்தவனும் தனக்கு 12 திருமுறைகளை உருவாக்கிக் கொண்டவனுமாகிய முருகனை வேண்டுகின்றேன். 5

## இலக்குமி

பொருள் இருந்தால் தான் உலகவர் போற்றுவர்
பொல்லாரும் நல்லராவர்
பூரியரும் கெட்ட நாரியரும் உயர்வாய்ப்
போற்றி வணங்கப்படுவர்!
இருளான பேர்களும் அழகாகத் தோன்றுவர்
இருகைகள் கூப்புவார்கள்
இன்னலைத் தீருங்கள் சொன்னதைச் செய்கிறேன்
எனக் கூறிச் சுற்றுவார்கள்
தெருளான சிவஞானம் இல்லாத மூடரும்
தெய்வமாய் வணங்கப்படுவர்
தீமையே செய்தாலும் தூயவர் எனப்படுவர்
செல்வமகள் உன்னருளினால்
அருளான தெய்வமே! வாதவூர் வள்ளலின்
அருமையை அறிந்தாயினும்
அன்னவர் வாழவும் அரும்பொருள் கூடவும்
அன்னை நீ காக்கை நன்றே!

வாதவூர் வள்ளலைக் காக்க வேண்டிப் பொல்லாரும், பூரியரும் போற்றப்படவும், கரிய நிறத்தவரும் அழகாகத் தோன்றிடவும் மூடரும் அறிவாளியாகப் போற்றப்படவும் காரணமாக இருக்கின்ற செல்வமகளாகிய இலக்குமியை வேண்டுகின்றேன். 6

## திருமால்

தூயரைக் காத்தவன், தீயரைத் தீர்த்தவன்
தோய் தயிர் உண்ட மாயன்
தூணிலே பிறந்தவன், வானினை அளந்தவன்
துகளறு சக்கரத்தான்
ஆயரைக் காக்கவும், ஆகாத்தோம்பவும்
அருங்குன்று தூக்கி நின்றோன்
அன்னையும் அப்பனும் சிறையிலே இருக்கவும்,
ஆழ்நதிக் கருள் புரிந்தோன்
நேயமாய்த் தமிழ்ப்பாடல் பாடிய கணிகண்ணன்
நிழல் போலப் பின்தொடர்ந்தோன்
நீள்கானக் குரங்குக ளோடரக்கனை வேடனை
நெருங்கிய உறவாக்கினோன்
மாயனாம் ஆயனே! பாண்டவர் நேயனே
வணங்குவன் அடித்தாமரை
வாதவூர் வந்தவனை, வேதநூல் தந்தவனை
மனமுவந்து காக்க வென்றே!

திருவாசகம் தந்த மாணிக்கவாசகரைக் காக்க வேண்டி, நல்லோரைக் காத்தும், தீயரைத் தீர்த்தும், கோகுலத்தில் வீடுகள் தோறும் தயிர் உண்டும், சக்கரம் தாங்கியும், ஆநிரை காத்திடக் குன்றைக் குடையாக எடுத்தும் யமுனையைப் புனிதப்படுத்தியும், கணிகண்ணனுடன் பின் சென்றும், குரங்கையும், குகனையும் அரக்கனையும் உறவினராக்கிக் கொண்டும் விளங்கிய பாண்டவர் நேசனாகிய மாயனை வணங்குகின்றேன். 7

## பிரம்மா

உருவம் இல்லாதவன்; திசைக்கொரு முகத்தவன்
உலகினர் யாவருக்கும்
உருவம் கொடுப்பவன், மறைகள் படைப்பவன்
ஒளியுறு ஞான மானோன்
அருவாய்க் கலந்தவன், உயர்ஞானமளிப்பவன்
ஆலயம் எங்குமில்லோன்
அகிலத்துள்ளோர் அனைவருக்கும் வினைப்பயன்
அவரவர்க்களிக்கின்றவன்
தெருளான ஞான உருவினன், கலைவாணி
திருமண வாளனான
தேவனே உன்னடி தினந்தினம் வணங்குவன்
திருமுறை ஓதுகின்றேன்
மருவான ஞானவான் திருவாதவூரனாம்
வழங்குதமிழ் மாமுனிவன்
வாடாத மாலையன், ஞானமா மலையனை
மடியேந்திக் காக்கவென்றே!

வாதவூர் முனிவனாம் வாதவூர் வள்ளலைக் காக்க வேண்டி, உருவமற்ற, திசை முகனாகிய, உயிர்களின் விதியை நிர்ணயிக்கின்ற பிரம்மனாகிய கலைவாணி மணாளனை வேண்டுகின்றேன். 8

## தமிழ்

தேனொடு பாலும் கற்கண்டின் தூளும்
தெங்கிளத் தெளிநீரும்
தெய்வப் பசுதரு நெய்யும் கரும்பின்
தெளிந்தெடு வடிநீரும்
ஊனுறு முக்கனிச் சாறும், அவற்றொடு
உயர்பொடிப் பருப்பினமும்
உரிய முறையினில் கலந்திளம் சூட்டோடு
உயர்தமிழ்ப் பெண்டிர் செய்த

வானூறு கட்டியும் திகட்டிடும், வானோர்
மாந்திடும் அமுதுகிட்டா
வையத்து வாழ்வோர்க்கு வாய்ந்த நல்லமுதே
மாக்குறள் பெற்ற தாயே!
தேனூறு மொழியே! தித்திக்கும் கனியே
திருவடி வணங்குகின்றேன்.
திருவாசகமெனும் அமுதுமொழி கொண்டல்
சேயினைக் காக்கவென்றே!

திருவாசகம் தந்த மணிவாசகரைக் காக்க வேண்டி, இனிய தேன், பால், கற்கண்டு, இளநீர், முக்கனிச்சாறு, இவற்றால் செய்த இனிப்புத் தெவிட்டும்; தமிழே நீ தெவிட்டாத அமுதமாவாய்! நீயே அக்குழந்தையைக் காக்க வேண்டுகிறேன். 9

## கண்ணகி

நண்ணும் இளமைப் பருவத்திலே மலரடி
ஞாலம் காணாதிருந்தவளே!
நாதன், கவுந்தி கூடவரக் கூடல்மா
நகர்க்கு நிழலாய்த் தொடர்ந்தவளே!
கண்ணே யனையான் கொலைப் படவும் தீக்
கனலாய் எழுந்தே பாண்டியனைக்
கையில் சிலம்பால் வென்றவளே! மூதூர்
கண்டோர் தொழவும், தீயோரைப்
பெண்ணே எரிக்கத் தீயூட்டி, வஞ்சியிலே
பேசும் தெய்வம் ஆனவளே!
பெண்கள் வணங்கும் கற்பரசி! தென்னன்
பெரிய மதுரை வைகையிலே
மண்ணே சுமந்தும் பிட்டுண்டும், சொக்கன்
மன்னன் கோலால் மொத்துண்டான்
வாதவூரர் பொருட்டென்றால் அந்த
மணிவாசகனை நீ காப்பாயே!

மண் கூடை தூக்கியும், மன்னன் பிரம்படிபட்டும் சொக்கநாதன் துன்புற்றது மாணிக்கவாசகராலன்றோ? அக்குழந்தையைக் காக்க வேண்டி, வண்ணச்சீரடி மண்மகள் அறியாது வளர்ந்து, மணாளன் கூடவே கவுந்தியடிகள் தொடர மதுரை சென்று, கோவலன் கொலையுண்டபின், மதுரையைத் தீக்கிரையாக்கி, நல்லோரைக்காத்து, வஞ்சியிலும், எல்லா ஊர்களிலும் தெய்வமாகிய கற்பரசி கண்ணகித் தாயே உன்னை வணங்குகின்றேன். 10



# 2. செங்கீரைப் பருவம்

பிள்ளைத் தமிழின் இரண்டாம் பருவம் செங்கீரைப் பருவம் நகர்ந்த குழந்தை எழுந்து அமர்ந்து அசைந்தாடுவது செங்கீரை அசைந்தாடுவது போன்ற அழகுடைத்தாகும். மழலைச் சொற்களை ஒலித்து அசைந்தாடுக என்று கூறிப்பாடும் பாடல்களைக் கொண்டது. இது நான்காம், ஐந்தாம் திங்களில் நிகழும்.

சித்தத்தின் உள்ளோடிப் புத்திக்குள் தித்திக்கும்
செம்மொழியான தமிழில்
தெய்வநெறியான திருசைவ நெறி தழைத்து மேல்
செய்ய சன்மார்க்கம் ஓங்க
முத்திநெறி அறியாத மூர்க்கரும் பக்திநெறி
முதற்படி கால்வைத்துமே
முக்கரண சுத்தியுடன் ஓதுவார் ஞானநெறி
முன்னோடியாய் வாழவே
தத்துவ விளக்கமாய் விளங்கிடும் திருச்சதகம்
தந்தனை மணிவாசக!
தவநெறியில் மேலேறிச் சிதாகாச ஒளியிலே
தானொன்ற வைத்த தேவே!
தித்திக்கும் வேதமே! ஞானத்தின் மூலமே
செங்கீரை ஆடியருளே!
சிவசிந்தை இமைப்போதும் அகலாத தவயோகி
செங்கீரை ஆடியருளே!

செம்மொழியான தமிழில், சைவநெறியும் சன்மார்க்கமும் தழைக்கவும், மூர்க்கரும் ஞானம் பெறத் திருவாசகத்தில் திருச்சதகம் (100) என்னும் திருப்பாடல்களைத் தந்த தேவனே! செங்கீரை போல் தலையசைத்து அழகாக ஆடியருள்வாயாக! **11**

கண்களிரண்டும் சிவன் கழல் கண்டே
களித்தனை அருளாளா!
காரிகையார்கள் வாழ்விலே சற்றும்
கலந்தறியா முனிவா!
மண்ணிலே வந்து பிறந்திட விழையா
மானுட மணிமுடியே!
மாலொடு பிரமனும் கண்டறியாப் பெரும்
மலரடி கண்டவனே!
பெண்ணுரு சுமந்த பாகத்தன் முடிமேல்
பிறை துயர் உறும் வண்ணம்
பெருங்கரை அடைக்க மண்கூடை சுமந்துமே
பிட்டுண வைத்த மணியே!
திண்ணப்பன் அன்பினைப் பண்போடு புகழ்ந்தவா
செங்கீரை ஆடியருளே!
சிவசிந்தை இமைப் போது அகலாத தவயோகி
செங்கீரை ஆடியருளே!

**கண்களினால் இறைவனைக் கண்டவனே! சிற்றின்பத்தில் செல்லாதவனே! இறைவனை மண் சுமக்க வைத்தவனே! சிவ சிந்தை அகலாத தவயோகியே! செங்கீரை ஆடியருளே! 12**

அங்கமது தங்கமுறப் பொங்கிவழி யோக முறை
அறியாத மூடர் கூட்டம்
அவனிதனில் அறிந்திடவும், புவனமதில் உயர்ந்திடவும்
அழுதேனும் அருள் கூடவும்
வங்கமென வந்தமொழி, கங்கைவரை வென்றமொழி
வழிதேறல் வெல்லுமாறும்
வான்முட்ட ஓடிவரும், தான்கெட்டும் ஊறிவரும்
வையைக் கரைவாதவூர்
இங்கெழுந் தருளியதும், துங்கமுறப் பாடியதும்
இறைவனைப் பணிகொண்டதும்

எம்மனோர் உய்திபெற, அம்மனோர் ஊழியிலே
ஏத்தவும் நீத்தலுரை கொள்
தெங்குலவு சோலைத் திருஉத்தர கோசமணி
செங்கீரை ஆடியருளே!
சிவசிந்தை இமைப்போதும் அகலாத தவயோகி
செங்கீரை ஆடியருளே?

உலகினர் யோக முறையை அறியவும், இறைவன் கடையூழியில் படித்துப் பொழுது போக்கவும், திருஉத்தரகோச மங்கை எனும் ஊரில் நீத்தல் விண்ணப்பம் அருளிய மணிவாசக மணியே! செங்கீரை ஆடியருள்க! **13**

நாயாய்ப் பிறக்கினும் நன்றியோ டிருப்பினும்
நக்கியும் கக்கியுண்ணும்
நானினிப் பிறந்திடேன்; நாயினும் கடையனேன்
நாதனே விடுதி கண்டாய்
தாயான அன்பிலே தோயவே செய்தனை
தனியனாய் விடுதிகொல்லோ
தன்னோடு வந்த பல அடியார்கள் சோதியிலே
தானொன்றி நிற்க யானோ
பேயனாய்த் தனிமையில் புலம்பலுறு கின்றேனே
பேரொளி கூடல் என்றோ?
பிஞ்சாக! திங்களைச் சூடியே! அம்மையே
பெருநெறி காட்டுமெனவே
சேயாக அழுதனை! சிவயோக வாரியே
செங்கீரை ஆடியருளே!
சிவசிந்தை இமைப்போதும் அகலாத சிவயோகி
செங்கீரை ஆடி யருளே!

நாயிற் கடையான தன்னைத்தாயான அன்பிற் தோயச் செய்தனை; அடியார் பலர் திருப்பெருந்துறைத் தீயில் மூழ்கினர்; யானோ தனியனாய்ப் புலம்புதல் அழகோ... என்று சேய்போல் அழுத மணிவாசகனே! சிவசிந்தை அகலாத சிவயோகியே! செங்கீரை போன்று அழகாக ஆடி அருள்வாயாக! **14**

நரிகளைப் பரியாக்கி மறைகளைக் கயிறாக்கி
ஞாலமெலாம் காணும் படியாய்
நான்மாடக் கூடல்நகர் கோனவன் நாணும் படி
நாரிபாகன் பரி ஏறியும்
பெரியோன் ஒருவன் திருப்பெருந் துறையில்
பிரியமுடன் தடுத்தாண்டதும்
பெரியோய் "இருக்க" எனக்கூறி உனையவன்
பிரிந்திடத் தாங்கிடாயாய்ச்
சரியை, கிரியை, யோகம் ஞானமெனச்
சான்ற நெறி நான்மைக்குள்ளும்
சான்றோர்கள் போற்றும் ஞானநெறிதனைச்
சாலவே புகழ்ந்துரைத்த
தெரிவரிய பரஞ்சோதி! திருவாத ஊர்மணிநீ
செங்கீரை ஆடியருளே!
சிவசிந்தை இமைப்போதும் அகலாத தவயோகி
செங்கீரை ஆடியருளே!

நரிகளைப் பரிகளாக்கியும், பெருந்துறையில் இறைவன் தடுத்தாண்டதும், சரியை, கிரியை, யோகம், ஞானத்துள் ஞான நெறியாம் சன்மார்க்க நெறி, நிற்கச் செய்ததும் ஆகிய மணிவாசக, நீ செங்கீரை போல ஆடி அருள்வாயாக! **15**

கருவாக ஒருதாயின் வயிற்றே புகுந்தாங்குக்
கணக்கிடும் பத்து மாதம்
கட்டங்கள் பற்பல கழிந்துமே குழந்தையாய்க்
காசினி வந்த வாறும்
உருவான அண்டங்கள் கோடானு கோடியாய்
உலகினை நடத்துமாறும்
உய்த்துணர வைத்தனை திருவண்டப் பாட்டிலே
உனைநிகர் விஞ்ஞானி யாரே
தருவான மெய்ஞ்ஞான வள்ளலே! சன்மார்கச்
சாமியே! அமுத மழையே!

தாழாத கீர்த்தியே! மாறாத வார்த்தையே
தமிழகம் ஈன்ற தவமே!
திருவாத ஊரிலே சிலம்போசை கேட்டவா
செங்கீரை ஆடியருளே!
சிவசிந்தை இமைப்போதும் அகலாத தவயோகி
செங்கீரை ஆடி யருளே!

கருவில் சேயின் பரிணாமத்தையும், அண்டங்கள் கோடியின் அசைவினால் உலக இயக்கத்தையும் அறிவியல் முறையில் திருவணடப்பகுதியில் அழகாக விளக்கியவா! அழகான செங்கீரை போல் தலையை ஆட்டி அருள்வாயாக! 16

ஊராகப் பெருந்துறையை உகந்தவன் உன்முதிர்ச்சி
உணர்ந்தனன் போலும் ஐய!
உன்வழியில் பரிகொள்ள ஒட்டாதே ஆட்கொண்டான்
உருக்கும் மறை ஓதக் கேட்டான்
தாரான கொன்றையும், நூலாகக் கோவையும்
தமிழ்மறை மேலாடையும்
தனக்கெழில் சேரவே கொண்டவன், தாண்டவன்
தண்டமிழ்ச் சொக்க நாதன்
கூரான ஞானவாள் கொண்டவா வாதவூர்க்
கொண்டலே! அமுத ஊற்றாம்
கொழிதமிழே அருவியென யாம் பாடக் கொட்டிய
குற்றால நீர் வீழ்ச்சியே!
சீராக ஓதினையே சிவபரங் கீர்த்தியைச்
செங்கீரை ஆடியருளே!
சிவசிந்தை இமைப்போதும் அகலாத சிவயோகி
செங்கீரை ஆடியருளே!

ஆண்டவன் உன் முதிர்ச்சி கண்டு, பரிவிற்று உன்னை ஆட்கொண்டு திருவாசகத்தை ஓதச் செய்தும் கீர்த்தித் திருஅகவலைக் கேட்டும் மகிழ்ந்தான்! அத்தகைய தவயோகியே செங்கீரை ஆடியருளே! 17

எட்டோ ரிரண்டையும் அறியாதவன் என்றே
எப்படி உரைக்கலாம் நீ
எட்டாத நாதனை! பற்றினைப் பிட்டினை
இடுகூலி ஏற்க வைத்தாய்
தொட்டுமே பெறுகின்ற தீக்கையைச் சிவனார்தம்
தூவடி வைக்கப் பெற்றே
துணையான சுற்றங்கள் யாவையும் துறந்தவா
சோதியுட் சோதியானோய்
நட்டனே! பொருளெனப் பொற்சபைக் கூத்தனை
நானிலம் அறியச் செய்தே
நான்வேறு தான் வேறு இல்லெனக் கலந்தனை
ஞானத்தின் மொத்த உருவே!
சிட்டனே! சிவலோகனே! எனச் சொன்ன உன்
செய்யவாய் தேனைச் சிந்தச்
சிவசிந்தை இமைப்போதும் அகலாத தவயோகி
செங்கீரை ஆடியருளே!

எட்டோடு இரண்டு (அ+உ) அறியாதவன் என்று உரைத்த பெரியோய்! இறைவனால் திருவடி தீட்சை பெற்றோய்! இறைவனோடு இரண்டறக் கலந்தவனே! செங்கீரை போல் ஆடியருள்வாயாக! 18

நாவாலே ஓதவும், கண்களால் காணவும்
நன்னெஞ்சம் சிந்திக்கவும்
நற்கரம் மலர்தூவி, தலைமுடி அடிதாழ
நாதனின் சேவைக் கானாய்
பாவான மட்டூறும் வாசகம் பெருமானைப்
பாராட்டிக் குணம் பாடியும்
பாராளும் வேந்தனின் பணிவிட்டுப் பிணிவீட்டிப்
பசியாற்றிக் கோயில் செய்தாய்
ஆவாவென் றன்பாலே அவனினும் சதுரனென
அடக்கமாய்க் கேட்ட கோவே!

அமுதூறும் வாசகங்கள் அறுநூற் றைம்பதும்
அழுதழுது குழைந்து மேலாந்
தேவாதி தேவனை நாவாரப் பாடினோய்
செங்கீரை ஆடி யருளே!
சிவசிந்தை இமைப்போதும் அகலாத தவயோகி
செங்கீரை ஆடி யருளே!

கண்கள் காண 'நா'வாசகம் ஓத நன்னெஞ்சம் சிந்திக்க, உடல் கோவில் கட்ட, இறையினும் சதுரன் தான் எனக் கூறும் ஏற்றம் பெற்ற தேவனே! செங்கீரை போல் ஆடியருள்க! 19

அம்மையே இல்லாத ஆனந்தக் கூத்தனோர்
அன்னையை அம்மை என்றான்
அருந்தொண்டு நெறிநின்ற திருநாவுக்கரசரை
அப்பரே என்றழைத்தான்
தம்மையே அன்பர்க்குத் தருகின்ற நாயகன்
சங்கரன், தேவி பாகன்
தாண்டவன், அருளாளர் பாமாலை பூண்டவன்
தமிழ்வைகைச் சொக்க நாதன்
இம்மையே நீகாண அந்தணன் ஆகிநின்
இருப்பிடம் ஓடி வந்தே
இன்னான் எனக் கூறி ஆண்டனன், பிடியென
ஈந்தனன் பெரும் பேறதாம்
செம்மையே ஆயவா! சிவபதம் பெற்றவா
செங்கீரை ஆடி யருளே!
சிவசிந்தை இமைப்போதும் அகலாத தவயோகி
செங்கீரை ஆடியருளே!

தாய் தந்தை இல்லாத தலைவன் காரைக்காலம்மையை, "அம்மை" என்றும் நாவுக்கரசரை அப்பர் என்றும் அழைத்தான். அந்தணன் உருவிலே வந்து உன்னை ஆட்கொண்டவன், சிவப்பேறு தந்தான்! அத்தகைய நீ செங்கீரை போல் ஆடியருள்வாயாக! 20

# 3. தாலப் பருவம்

இஃது பிள்ளைத் தமிழின் மூன்றாம் பருவம். தாய் தாங்குத குழந்தையைத் தொட்டிலிலிட்டுக் குழந்தையின் சிறப்பு, மரபின் சிறப்பு, வரலாறு இவற்றைக் கூறித் தாலாட்டும் பாங்கில் நாவசைத்துப் பாடும் பாடல். தாலாட்டுப் பாடல் தமிழின் தொன்மையும் நாட்டுப்புறப் பாடலாகும். இது பிசி என்னும் இலக்கிய வகையைச் சேர்ந்தது. இது ஆறாம், ஏழாம் திங்களில் நிகழும்.

மானே! மயிலே! மரகதமே! வெண்முத்தே
வளர்பவள நீல மணியே!
வாதவூர்ப் புஷ்ப ராகமே மேதகமே
வைரமே! பச்சை மணியே
தேனே! குவளையே! செண்பகமே! மல்லிகையே
சீலமிகு பொற்கமலமே!
தெய்வீக மணம் நாறும் குறிஞ்சியே! பிடவமே!
தேன்சிந்தும் கொன்றை மலரே
வானே! நிலனே! தீயே! வளிநீரே
வானவர் மகிழ முதமே!
வளர்துயில் கொள்பகற் குறாம் எழ எழுச்சியாம்
வழங்கிய பாடல் பத்தில்
தானே வந்தெம்மைத் தட்டி எழுப்பியவா
தாலோ தாலேலோ
தாதூதும் வண்டு முரல் வாதவூர் வந்த மலர்
தாலோ தாலேலோ!

மானே! மயிலே! நவரத்தின மணிகள் போன்றவா! மல்லிகை முதலான மண மலர்கள் போன்றவா! வான் முதலான பூதங்களாகவும், அமுதமாகவும், விளங்கு மணிவாசக! திருப்பள்ளி எழுச்சி பாடி ஆன்மாக்களை எழுப்பியவா! தாலோ தாலேலோ! 20

கண்டுடற கடம்புடன் மல்லிகை முல்லைமலர்
கருங்கோல் குறிஞ்சிப் போதும்
காயாவும், கொன்றையும் காந்தளும், அரளியும்
கானக மலைப் பூக்களும்
தெண்டிரை வையை நீர் தந்ததே நின்தூய
திருவடி அர்ச்சனைக்காய்த்
தேன்பாகு, வானமுது, இவையாவும் நீபொழிந்த
திருவா சாகம் ஆகுமோ
வண்டுறு தண்டேன் மொண்டுடன் கலந்து மணம்
வழிசந்தனம் நாறவும் தேன்
வாழை முதலாக முக்கனிச் சாறுடன் கீழ்
வண்டலிட் டோடு மாறும்
தண்டமிழ் வைகை தாலாட்டக் காலாட்டும்
தாமரைப் போதே தாலேலோ!
தாதூதும் வண்டுமுரள் வாதவூர் வந்தபெருந்
தலைவா! தாலோ! தாலேலோ!

வைகையாறு நின்னை அர்ச்சிக்கக் கடப்ப மலர் முதலான மலர்களை வாரி வருகிறது. நின் திருவாசகமோ அமுதினும் மேலானது. சந்தனம் மணக்கப் பழச்சாறு சுமந்து ஓடும் வைகை தாலாட்ட அதன் கரையில் உள்ள வாதவூரில் வந்தவா தாலேலோ!**22**

மலைமுடி காணாதே மலரவன் வருந்தினான்
மாயவன் மண்முட்டினான்
மண்ணசை கொண்டிட்ட பாண்டியச் சொக்கனோ
மண்கூடை தூக்க நேர்ந்தான்!
கலைமலி கண்ணப்ப வேடனின் அன்பு அவன்
கண்ணாலே கண்டான் தந்தை
காலினை வெட்டியவன் காதலைக் கண்டங்கு
காட்சி தந் தருள் நல்கினான்!
மலைமகள் ஒருபாதி கொண்டதால் சமநீதி
வழங்கியே வழிகாட்டினான் மறை

மாமூவர் தேவாரப் பாடல்களோடுனது
வானமுதப் பாடல்கொண்டான்
தலைமுடிப் பாரமொடு, சந்திரப் பூச்சூடும்
தலைவர்க்கினியாய் தாலேலோ
தாதூதும் வண்டு முரள் வாதவூர் வந்தபெரும்
தலைவா! தாலோ! தாலேலோ

சிவனின் அடிமுடி காணாதே அரியும் அயனும் வருந்தினர். மதுரைச் சொக்கனும் மண்கூடை தூக்க நேர்ந்தது. கண்ணப்பனின் அன்பினை அவன் கண்கொண்டு காணவே அவனது கண்பெற்றான், தந்தையின் தாளை வெட்டிய சண்டீஸ்வரனின் அன்பு கண்டு அருள்புரிந்தான்! அவன் பெண்ணிற்குச் சமநீதி தந்தவன், மூவர் தேவாரமும், உனது திருவாசகமும் பெற்றவன். இளம்பிறை அணிந்த சிவபெருமானின் தொண்டனே! வாதவூர் வந்தவா! தாலேலோ! 23

படைமாட்சி கொள்ளவே இறைமாட்சி கொண்டவன்
பரிகொள்ளப் பணித்தான் நும்மை
பரி, கரி, மண், மனை செல்வங்கள் யாவுமே
பரமற்கே சொந்த மாகும்
இடையிலே நமதுறவு வாடகை போன்றதே
எல்லாமே நிலையில்லதே!
என்னுமொரு தத்துவம், பாண்டியன் கற்றிட
ஈசனுன் துணைக் கொண்டனன்
நடையிலே நின்றுயர் நாயக! நின்னுணர்வை
நாடகம் என்றுரைத்தாய்
நான்மறை நாயக! வான்மறை வாசக நின்
நலமெல்லாம் அறியற்பாற்றோ?
தடையில்லா அமுது பொழி, கொடைவல்ல தமிழ்மேகம்
தானே பொழிந்த புலவ!
தாதூதும் வண்டு முரள் வாதவூர் தந்த பெரும்
தலைவா! தாலோ! தாலேலோ!

திருப்படையாச்சி தந்தவா! உலகும், பொருள்களும் நிலை இல்லன என்பதனை உன்மூலம் பாண்டியனுக்கு இறைவன் உணர்த்தினான். திருவாசக மழைபொழிந்த மேகமே! திருவாதவூர் வந்தவா! தாலேலோ! 24

அண்டங்கள் பல்கோடி பம்பரம் போலவே
ஆணைக் கயிற்றில் நடத்தி,
ஆறாறு சக்கரம் ஆறாம் அறிவினர்
அறிந்திட உண்மை உணர்த்தி
மண்டலம் வாழிட மாய்க்கொண்ட உயிர்த்தொகுதி
வாழநல் வழிவகுத்தே
வானவர், கானவர் யாவரும் வணங்கிமேல்
மாமனிதர் ஆகச் செய்தோய்!
தெண்டிரை எழினிசூழ் தென்னவன் முன்னவன்
தெளிஞான ஒளிகாட்டும் ஓர்
தெய்வமா ஞானியாய்த் திருவாத வூரிலே
திரு அவதாரம் செய்தே
தண்டமிழ் வேதமாம் திருவாசகம் தன்னால்
தலைவனைப் புகழ்ந்த கோவே
தாதூதும் வண்டு முரள் வாதவூர் வந்தபெரும்
தலைவா! தாலோ! தாலேலோ!

தம் ஆணைக் கயிற்றால் அண்டங்கள் பலகோடி நடத்தியும், ஆறாது சக்கரங்கள் அவற்றின் அருமைகளை மனிதர் உணரவும், தாதூதும் வண்டு முரள் வாதவூர் வந்தவா! தாலேலோ! 25

அன்போடு பாசமும், அமுதமும் தன்சேயின்
அழுகையைக் காணும் முன்னே
ஆர்வமாய் ஊட்டுபவள் இப்பிறவித் தாயன்றி
ஆண்டவன் எப்பிறப்புமே
தென்பால் உகந்தாடும் தில்லைச் சிற்றம்பலவன்
தெய்வக் கொடி நாயகன்

தேனோடு பசும்பாலும் கற்கண்டும் கனிச்சாறும்
சேர்த்தொன்றாய்ச் சூடேற்றியே
பொன்மேவு கலங்கொண்டு ஊட்டினும் அஃதுள்ளே
போகா துவட்டலாகும்
போதவூர் போகாத வாதவூர் வள்ளலுன்
பொன்னூசல் பாட்டுவட்டுமோ
தென்பாண்டி நாடுதிகழ் திருவுத்தர கோசைவளர்
திருவே தாலோ தாலேலோ
திருவாத ஊரில் வளர் தில்லை நடராசர் மகிழ்
தேவா தாலோ தாலேலோ

பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரிவுடையவன் தில்லைச் சிற்றம்பலவன். தேன், பால், கற்கண்டு, கனிச்சாறு கலந்த அமுதினைப் பொற்கிண்ணத்தில் வைத்து ஊட்டினும் தெவிட்டும்! நீ தந்த பொன்னூஞ்சல் பாட்டு உவட்டாது! திருவாதவூர்த் தேவா! தாலோ! தாலேலோ! **26**

இன்னிசை வீணையர், யாழினர் குழலினர்
இன்குரல் முழவு, தக்கை
இசைக்கின்ற பேர்களும் நகையோடு கூடினர்
இருகை மலர் கூப்பி நின்றார்
தென்னிசை தமிழோடு வேதத்தை இசைப்போரும்
தெம்மாங்கு பாடுவோரும்
தேன்பழச் சோலை பயில்கின்ற குயில்களும்
தேன்வண்டு கிளிக்கூட்டமும்
உன்திரு வாய்வழி ஒழுகிய அமுதமாம்
உயர்திரு வாசகத்தை
ஓதியும் உருகியும் உள்ளுள் உவக்கின்றார்
உன்மத்த ராகின்றாரால்
நன்மேனி உன்மேனி பொன்மேனி ஆகியே
நாதனைச் சென்று சேர்ந்தோய்

நாதமே! கீதமே! வாதவூர் வள்ளலே
நாதனே தாலோ தாலேலோ

இன்னிசை பாடுவோர், வேதமிசைப்போர், இவர்களின் இன்னிசையுடன் பறவைகளின் இசையும் ஓங்கவும், நின் திருவாசகம் ஓதுவார் உருகிப் பாடவும் நின்பக்தர்கள் மகிழ்கின்றனர். பொன்மேனி பெற்று, நாதனை நண்ணிய வாதவூர் வள்ளலே! தாலேலோ! **27**

கடையவ னென்று நீ அவையடக்கமாக முக்
கண்ணனைப் பாடிப் பின்னால்
கசிந்துருகும் அடியவர் குழாத்திலே வைக்கவே
கனிந்தருள வரம்வேண்டினாய்
சடையவன் நீதிருவாய் மலர்ந்த பொன்னூசல்
தனைக் கேட்டுப் பித்தனாகித்
தானுமோர் அந்தணன் ஆகிவந்தாண்டனன்
தனுகரணபுவன மீந்தோன்
உடையவன் இறையவன் அகப்பொருள் என்னுமோர்
உயர்அக இலக்கணத்தை
உவந்து மேதந்தனன், கோவையைப் பாடு என
உன்னிடம் கேட்டுப்பெற்றான்
விடையவன் பற்றினை இறுகவே பற்றிய
விரகனே தாலோ தாலேலோ
விரைமலர்ச் சோலைசூழ் வாதவூர் வள்ளலே
விமலனே தாலோ தாலேலோ

கடையவன் என்று கூறிக்கொண்டும், அடியவர் குழாத்தில் வைக்க வேண்டினாய், திருப்பொன்னூசல் பாடியவா, பித்தன், அகப்பொருள் இலக்கணத்தையே தமிழில் எழுதித் தந்தான். அதற்குப் பதிலாகத் திருக்கோவை பாடக் கேட்டெழுதிக் கொண்டான். வித்தகனை இறுகப் பற்றிக்கொண்ட வா! வாதவூர் வள்ளலே தாலோ! தாலேலோ! **28**

மெய்யனே! வேத கீதனே! எந்தன்
வினையடி வேரறுக்கும்
விமலனே! தீயேந்தி! நீறணிந்து ஞானமாம்
விடையேறும் எங்கள் பிரானே! யாம்
உய்யுமா றெண்ணி ஓலமிட் டேங்கி இவ்
உலகெலாம் தேடிக் காணா
உத்தம! வித்தக! சித்தனே! பித்தனே!
உனைத் தொடர்ந் திறுகப் பற்றி

வையகம் எல்லாம் வணங்கிடும் எங்கள்
மாணிக்க வாசக மாமணிநின்
மலரடி போற்றி, அலறிட வாய்க்கும்
மண்ணக விண்ணக வாழ்வே!
வாய்பே சாஈழத்து இளவரசி நாச்சுழன்று
வழக்காட வைத்தவா தாலேலோ
வான் பொய்க்கும் காலத்தும் தான்பொய்யா
வைகைக்கரை
வாதவூர் மன்னனே தாலேலோ!

மெய்யனே! என் வினைகளை வேரறுத்தவனே! பிடித்த பத்துப் பாடிய வா! ஊமைப் பெண்ணாகிய ஈழத்து இளவரசியைப் பேச வைத்தவா! தாலோ! தாலேலோ! **29**

மன்னர் தாங்கும் செங்கோலும் தூய
மனிதர் போற்றும் நற்சொல்லும்
வறுமை இல்லா வளவாழ்வும், நல்லோர்
வாழ்த்தும், புகழும், மாலைகளும்
பொன்போல் நல்கும் பரிசுகளும், நண்பர்
பொறுமை கருணை நல்லுள்ளம்
புலமை பெருமை நன்றி மானமொடு
புவியோர் நாடும் உயர்பதவி

கன்னல் போலும் மொழியுடைக் கற்புக்
காரிகை, நற்பிள்ளைகளும்
காசினி தனிலே நோயிலா வாழ்வும் மிகு
காப்பினை நல்கும் நிதிக்குவையும்
உன்னைத் துதித்தால் ஓடிவரும் தெய்வ
உருவே தொழுதோம் தாலேலோ!
உடலில், உணர்வில் உயிரில் கலந்த
உறவே தாலோ தாலேலோ!

பேரும், புகழும், பொன்னும் பொருளும், நல்ல மனை மக்களும், வளவாழ்வும், உன்னைத் துதித்தால் வரும்! அத்தகைய அருளாளா! தாலேலோ! **30**



# 4. சப்பாணிப் பருவம்

இஃது பிள்ளைத் தமிழில் நான்காம்பருவம். பாணி-கை. குழந்தை எழுந்து, அமர்ந்து கொண்டு இரு கைகளையும் சேர்த்துக் கொட்டி மகிழும் பருவமாகும். இந்நிகழ்ச்சி எட்டு, ஒன்பதாம் திங்களில் நிகழும்.

அமரர்கள் தானவர்கள் வானவர்கள் ஆவதற்காய்
அனுதினம் துதிக்கும் பொற்றாள்
அதுபழச் சுவையென அமுதெனப் பலவாய்
அறிந்துணராத மற்றோர்
எமரெவர் ஏதெமதூர், யாருற்றார், ஆரயலார்
எனக்கூறித் துறவு பூண்டோர்
இவரெல்லாம் காணாத திருவடி உனைத்தேடி
ஏக்கற் றலைந்த தையோ!
நமக்கறி வானவா! நான்மறை வித்தகா
நானெறி யுணர்ந்த மேலோய்
ஞானமா நெறியோடு சன்மார்க்கம் நின்றனை
நற்காந்தள் கரங்கள் சேர்த்துத்
தமரநீர்ப் புவனங்கள் முழுவதும் புரக்கின்ற
தாய்வைகை மடித வழ்ந்தோய்
தமிழமுது பொழிகின்ற மதுரைநகர்ப் புகழ்மன்ன
சப்பாணி கொட்டி யருளே!

வானவர், முனிவர்கள் இறைவனைத் தேட, உனைத்தேடி அலைந்தான். நான்கு நெறிகளில் (சகமார்க்கம், தாசமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சன்மார்க்கம்) நான்காம் நெறி நின்றவா கைகள் தட்டி மகிழ்ந்திடுக! 31

தவம்புரி யாதவன், அறந்தெரியாதவன்
தடம்மாறித் தடுமாறுவோன்

தாழாத கீர்த்தியும் மாறாத வார்த்தையும்
தலைவைத்துப் படுக்காதவன்
எவரெவர் பாவமும், எவரெவர் சாபமும்
எம்கணக் கேறுமாறும்
என்சிந்தை அலையுமால் வன்சொலே மொழிவனால்
என்செய்வேன் ஏழையேனே!
தவறான செய்குவன் இவனாரென எண்ணலை
தண்டனை போது மைய
தானே வளர்த்த மிகு நச்சுமா என்றனை
தானது நானன்றி யார்?
தவவேடம் கொண்டவா! பவரோகம் வென்றவா
சப்பாணி கொட்டி யருளே!
சாலோக சாமீப, சாரூப மானவா
சப்பாணி கொட்டி யருளே!

ஒன்றுக்கும் உதவாத நானே நச்சுமரம்! சாரூபம் (இறை உருவம்-சிவமாக்கி) கொண்டவா சப்பாணி கொட்டுக! 32

தெய்வீக தத்துவம், சிவனாரின் மகத்துவம்
செப்பு திரு வாசகத்துள்
சிவக்காட்சி மறைந்தபின் அழுதழுது பாடிய
திருச்சதகம் நூறு பாட்டில்
தெய்வநிலை பெற்றேறு படிநிலைகள் பத்திதனைத்
தெளிவாக்கி யுயர்ந்தவாற்றைத்
தெளிவித்தல் எளிதா மோ? உற்றறியும் உணர்வேயாம்
தேனைச் சுவைத்தல் போலாம்
மெய்யுணர்தல், அறிவுறுத்தல், சுட்டறுத்தல், ஆன்மசுத்தி
மேற் கைம் மாறு நல்கல்
மெய்ப்போக சுத்தியுடன் காருணியத் திரங்கலொடு
மேன்மேல் ஆனந்தங்கொள்ளல்
பொய் விட் டானந்த பரவச மடைதல்
பேரானந்தங் காணல் எனப்

பொய்யாப் பேரானந்தம் பாட்டிலே தீட்டிய
பூங்கரம் கொட்டி யருளே!

இறைக்காட்சி மறைந்தபின் (திருப்பெருந்துறை) அழுதும் தொழுதும் பாடிய திருச்சதகம் நூறு (100) பாடல்களில் பக்தியின் படிநிலைகள் பத்தினை உணர்த்தியவா பூப்போன்ற கரங்களால் தட்டிமகிழ்க! **33**

படைக்கலம் உனக்கோ ஐந்தெழுத் தோதல்
பரமனுக் குன்பாட் டெழுதல்
பாண்டியன் படைக்கோ பரிமா வாங்கிடப்
படர்ந்தனை பொற்காசுடன்
இடைக்கலம் இன்றி எழுப்பிறப் பவர்க்கே
இணங்கி ஆட் பட்டீர் ஐய!
இமயக் கொடிபடர் சமயக் குருமுதல்
ஏழைபங் காளன் பொற்றாள்
துடைக்கினும் போகேன் எங்கெங்கேகினும்
தொடர்ந்து சென்றி றுக்கமாகச்
சூழ்ந்தனை, மோனத்தில் ஆழ்ந்தனை மனிதருள்
தூயனே! வாதவூர் நாதனே!
அடைக்கல மாயினை, ஆனந்த வெள்ளத்தில்
அமிழ்ந்தனை, எம்மை அமிழ்த்தினை
அருமறை தீட்டிய ஏட்டினை ஏந்தினோய்
அருங்கரம் கொட்டி யருளே!

மணிவாசக! நீ ஐந்தெழுத்து ஓதினை! திருவாசகம் பாடினை! இறைவன் எழுதினான். சிவானுபவ வெள்ளத்தில் ஆழ்ந்த அமுதனையாய் சப்பாணி கொட்டுக! **34**



## வேறு

அமுதக் கடலின் அமுதை வடித்தே
அமைந்த திருக்கரங்கள்
அமுதைத் திரட்டி அமுதை உருட்டி
அமைந்த மலர்விரல்கள்
அமுதத் தமிழில் அமுதக் கவிதை
அணிந்த திருச்செவிகள்
அமுதத் தமிழைப் படித்து மகிழ்ந்த
அமுதக் கண்மலர்கள்
அமுதம் அருந்தி மகிழ்ந்தா லொத்த
அமுத நல்லிதயம்
அமுதம் பொழியும் அமுதம் வழியும்
அமுதே உருவானோய்
அமுதம் ஊறும் அமுதம் நாறும்
அமுதத் தமிழ் தந்தோய்
அமுதக் கரங்கள் இரண்டினைச் சேர்த்தே
அழகாய்க் கொட்டி யருளுகவே!

**உன் அங்கங்கள் யாவும் அமுதால் ஆனவை! நீ தந்த திருவாசகமும் அமுதே! அமுதக் கரங்கள் சேர்த்துக் கொட்டி மகிழ்க.** **35**

**சந்தனம் நாறும் மனைகள் எல்லாம்**
**சண்பகம் நாறும் வனங்கள் எல்லாம்**
**தாழம்பூ நாறும் கரைகள் எல்லாம்**
**தாய்மையே நாறும் மனங்கள் எல்லாம்**
**செந்தழல் நாறும் குண்டம் எல்லாம்**
**செந்நெல் நாறும் கழனி எல்லாம்**
**சிவமே நாறும் செய்யுள் எல்லாம்**
**திருநீறு நாறும் நெற்றி எல்லாம்**
**சுந்தரம் நாறும் மாடம் எல்லாம்**
**சோறது நாறும் கூடம் எல்லாம்**

சுவனம் நாறும் ஆடை எல்லாம்
சொற்றமிழ் நாறும் வீதி எல்லாம்
செந்தமிழ் நாறும் நாவிலெல்லாம்
தெய்விகம் நாறும் கோவில் எல்லாம்
திருவருள் நாறும் வாதவூர் வள்ளல்
திருமலர்க் கரங்கள் கொட்டுகவே!

வாதவூரின் மனைகளில் சந்தனம் மணக்கும் காட்டில் சண்பகம் மணக்கும், ஆற்றின் கரையில் தாழம்பூ மணக்கும், மனித மனங்களில் தாய்மையும், குண்டங்களில் தீயும், வயல்களில் நெல்லும், பாடல்களில் சிவமும், நெற்றிகளில் திருநீறும் மிகுந்திருக்கும். அழகான வீடுகள், அன்னதானக் கூடங்கள், சோற்றில் நெய், ஆடைகளில் தங்கச் சரிகை காணப்படும், வீதிகளில் தமிழும், கோவில்களில் தெய்வீகமும் வாதவூர் முழுவதும் திருவருளும் மிகுந்திருக்கும்! அத்தகு சிறப்புடைய தேவா! திருக்கரங்கள் கொட்டி மகிழ்க! **36**

தென்னம் பழங்கள் பலவினில் வீழவிண்டு
சிதறிய மோட்டுப் பலாக்கனிகள்
தேமா மரமிசைத் தேன்கூ டுடைத்துத்
தேன்மழை சிந்தத் தேனருவி
கன்னல் பாத்திபாய்ந்திட உண்டே
களித்த தேரை, வண்டினங்கள்
கனிந்த இசையில் பாடிடஅக்
கரையில் மேய்ந்த ஆன்கன்று
பின்னல் வலையில் சிக்கிடா மான்போல்
பெரிதாய்ப் பாய்ந்தோடி வந்து
பெற்றம் முட்டச் சிந்திய அமுது
பெருவெள்ள மிட்டோடி வர
அன்னப் பறவை நீரைப் பிரித்தேதன்
அலகால் அருந்திக் களிப்படையும்
அழகே சிரிக்கும் வாதவூர் வள்ளல்
அமுதக் கரங்கள் கொட்டுகவே!

தேங்காய் பலவில் வீழப் பலா மாமரத்தில் தொங்கிய தேனடையில் விழத்தேனாறு கரும்புப் பாத்திகளில் பாய்ந்தது. அங்கே தவளைகள் தேனை மாந்திப்பாடக் கன்றுகள் பயந்து ஓடிச் சென்று தாய்ப்பால் மடியில் முட்டியது. அதனால் பால் சிந்திப் பெருக்கெடுத்தோடியது. அப்பாலில் நீரைப் பிரித்து அன்னம் பருகியது. அத்தகு, சிறந்த ஊராகிய வாதவூரரே கைகொட்டுக!37

கடலுக்குக் கரையில்லை; வானுக்கு வரையில்லை
காற்றுக்கு வேலியில்லை
கல்விக்கு வயதில்லை, கற்பிற்கு விலையில்லை
கதிருக்குத் தடைகள் இல்லை
உடலுக்கு நிலையில்லை, உயிருக்கு அழிவில்லை
உண்மைக்கு மூடி இல்லை
உறவுக்குப் பகையில்லை, உணவிற்குச் சிறையில்லை
உயர்விற்கு எல்லை இல்லை
அடலுக்குச் சரிவில்லை, அன்பிற்குக் குறையில்லை
அழிவிற்குச் சிதைவே இல்லை
ஆணவம், கன்மம், மாயை இம் மூன்றும்
ஆன்மாவை அழிப்பதில்லை
மடமானாம் பசுவினை இடக்கையில் ஏந்துவோன்
மலரடி போற்றும் உந்தன்
மாணடி பற்றுவோர்க் கில்லையே மறுபிறவி
மலர்க் கரங்கள் கொட்டியருளே!

கடலுக்குக் கரை இல்லை, வானுக்கு எல்லை இல்லை, காற்றுக்கு வேலி இல்லை, கற்பதற்கு வயது வரம்பு இல்லை, சூரியனுக்குத் தடைகள் இல்லை, உடலுக்கு நிலை இல்லை, உயிருக்கு அழிவில்லை, உண்மைக்கு மூடி இல்லை, உறவில் பகை, உணர்வுக்குச் சிறை உயர்வுக்கு எல்லை என்பன இல்லை, வீரத்திற்குச் சரிவும், அன்பிற்கு விலையும், அறிவிற்குச் சிதைவும் இல்லை, ஆணவம், கன்மம், மாயை ஆகிய அழுக்குகள் ஆன்மாவை அழிப்பதில்லை. உன்திருவடி வணங்கினோர்க்கு மறுபிறப்பும் இல்லை. உன்மலர்க் கரங்களைத் தட்டி மகிழ்க! 38

சரியை, கிரியை, யோகம், ஞானம்
சத்திய ஆன்மப் பரிணாமம்
சமாதி நிலையை அடைந்தவர் மீண்டும்
சரியை தொடங்கும் பரிதாபம்
எரியை மூட்டிச் சிவசிவ என்றே
இடுகின்ற சமித்துப் பலவாகும்
இமயம் முதலா எண்வகை முறைகள்
ஏறுதற் குதவும் படியாகும்
துரியம் கடந்தும் துரியா தீதச்
சுத்தசன் மார்க்க நெறி பேணச்
சொல்லிய பாட்டின் பொருளுணர் வோர்க்குத்
திருவாசகமே நிறைவாகும்
பெரிய பொருளாம் ஒருவன் சிவனெனப்
பேசிய பெருமான் நீயன்றே
பெருநிலம் புகழும் வாதவூர் மணியே
பிஞ்சுக் கரங்கள் கொட்டுகவே!

சரியை, கிரியை, யோகம், ஞானம் சமயநெறிப் பரிணாமம், இயமம் முதலாக எட்டும் யோகப் பரிணாமம். துரியம் முதலானவை ஆன்ம உணர்வு, சன்மார்க்கம் ஆன்ம அனுபவம்! இவை எல்லாம் அடைந்தவா மலர்க்கரங்களால் தட்டி மகிழ்க!39

உடையாள் உந்தன் நடுவிருக்கும் அந்த
உடையாள் நடுவுள் நீ இருத்தி
உடையாள், உடையான் இருவீரும் என்றன்
உள்ளத் திருக்க வரவேண்டும்
கடையன் என்னைக் கருணை மனத்தால்
கலந்தாய், நானும் நீயானேன்!
காயம் கிடத்தி மறைந்தால் இந்தக்
காசினியோர்கள் சிரிப்பாரே!
சடையாய் எளியேன் தளர்ந்தேன்; அயர்ந்தேன்
தாங்குக வென்றே சரணடைந்தே

தாளிணை பற்றி அழுதும் தொழுதும்
சமர்ப்பணம் செய்தாய், முச்சூலப்
படையான் உந்தன் பாட்டினைக் கேட்கப்
பஞ்ச கச்ச உருவோடுன்
பணிசெய்தான் அக்கூத்தன் மகிழ்ந்திடப்
பனிப்பூக் கரங்கள் கொட்டுகவே!

சிவனின் உள்ளத்தில் பராசக்தி! பராசக்தி உள்ளத்தில் சிவன்! இருவரும் என் உள்ளத்தே! காயம் கிடத்தி இறந்தால் சிரிப்பர் என்றாய்! இறையொளியில் கலந்தாய்? உன் திருவாசகப் பாடல்களை எழுத அந்தண உருவத்தில் இறைவனே வந்தான்! அத்தகையோய்! பூங்கரங்கள் கொட்டி மகிழ்க! **40**



# 5. முத்தப் பருவம்

பிள்ளைத் தமிழில் இது ஐந்தாம் பருவம். பெற்றோர் குழந்தையை முத்தம் தருமாறு வேண்டும் பருவம். இது பத்து, பதினோராம் திங்களில் நிகழ்வதாகும்.

என்பினை உருக்கிடும், மனதினைக் குழைத்திடும்
இறைவனை ஏவல் செயப் பண்ணும்
இட்டமுடன் அட்டமா சித்திகள் யாவையும்
எடுத்து இந்தா எனக் கொடுக்கும்
பொன்னுக்கும் பொருளுக்கும் அலைகின்ற நெஞ்சினைப்
புனிதப்படுத்திக் காக்கும்
புவியோர்கள் யாவரும் கைகூப்பி வணங்கியே
புகழ்ந்தேத்திப் போற்றச் செய்யும்
அன்னைக்கு மன்னையாய் அப்பனுக் கப்பனாய்
அருநெறி காட்டி நிற்கும்
அழியுமுடல் ஒளியுடலம் ஆக்கிடும், ஆற்றலுடை
அற்புத நூல் தந்தவா, வான்
மின்னலுருக் கொடியிடை, கன்னல் மொழி பயில் மலர்
மீனாட்சி அருள் மணக்கும்
மேன்மைமிகு வாதவூர் வள்ளலே கனியமுத
விரைமலர் வாய் முத்தம் தருகவே!

எலும்பினை உருக்கும், மனதைக் குழைக்கும் அட்டமா சித்திகளை நல்கும், மூவாசை கொண்ட மனிதரைப் புனிதராக்கும் மானிடர் யாவரையும் வணங்கச்செய்யும், ஊன் உடலை ஒளி உடலாக்கும் சிறப்பினை உடையது திருவாசகம். மீனாட்சியின் அருள் மிகும் வாதவூர் வள்ளலே அருள் மணக்கும் வாயால் முத்தம் தருக! 41

பண்டைய நாளிலொரு பைந்தமிழ்ப் பாவலன்
பாரியின் உற்ற தோழன்
பறம்புமலை போன்றதொரு உயர்வான பண்பினன்
பரிவுமிகு நட்பின் சின்னம்
அண்டமது சென்றுலவு பிரபஞ்சம் உள்ளளவும்
அழியாத புகழ்கொண்டவன்
அப்பழுக்கில்லாத அந்தணன், கபிலனாம்
அருந்தமிழ்ப் புலவன் தோன்றி
எண்டிசை எங்கணும் புகழ்பரவ வாழ்ந்தனன்
இன்று நீ அவதரித்தாய்
எழில்கொஞ்சும் குடகுமலை தனில் தோன்றி ஆர்வமொடு
இன்தமிழ் வைகை அன்னை
வண்டலிட் டோடிவரும் கொண்டல் வீழ் என்ன குழல்
வனிதையர் மாலை தேடி
வளர்தென்றல் மணம் வீசும் மாடஞ்சூழ் வாதவூர்
வள்ளலே முத்தம் தருகவே!

அன்று, பாரியின் நண்பன் கபிலன் அவதரித்தான்! இன்று நீ வாதவூரில் அவதரித்துள்ளாய். தென்றல் மணக்கும் திருவாதவூரில் தோன்றியவா திருவாய் முத்தம் தருக! 42

தேன் சொட்டும் குறிஞ்சிமலர் திசையெட்ட மணம்வீசச்
செண்பகப் பூக்கள் நாறத்
திசைநாலில் கிளைபரப்பிச் சந்தன மரக்கூட்டம்
தேன்கூட்டில் நறவு நாற
ஊன்புக்கு உயிர்புக்கு வாழும் முறை போன்றதொரு
உணர்வு நிறை தேமாக்களின்
உயர்கொம்பில் அமர்ந்து குயில் ஓமெனும் இசைபாடி
ஊர்ப்புறம் மகிழச் செய்யும்
வான்சொட்டும் வையகம் எல்லாம் வறண்டு மிக
வறுமை பிணி வாட்டும் போதும்

வளமதுரை மீனாளின் அருள்வெள்ளம் எப்போதும்
வாரியாய் வளர்வதொப்ப
வான்முட்டும் குடக்கோட்டு ஆன்முட்டப் பெருக்கிட்டு
வயல்குளம் நிரப்பி என்றும்
வற்றாத வைகை நதி தாலாட்டும் வாதவூர்
வள்ளலே முத்தம் தருகவே!

மலர்கள் மணக்கச் சந்தன மரங்களில் தேன்கூடு தொங்க, மாமரங்களில் குயில் பாட, வான் பொய்ப்பினும் தான்பொய்யா வைகை நதி தாலாட்டும் வாதவூர் வந்த வள்ளலே முத்தம் தருக!43

தாய்மை மணக்கும் பேச்சில் எல்லாம்
தண்மை மணக்கும் மூச்சில் எல்லாம்
தயவே மணக்கும் செய்கை எல்லாம்
தண்ணீர் மணக்கும் பொய்கை எல்லாம்
சேய்மை மணக்கும் சோலை எல்லாம்
தெய்வம் மணக்கும் சாலை எல்லாம்
திலகம் மணக்கும் நெற்றி எல்லாம்
தென்றல் மணக்கும் மேடை எல்லாம்
தூய்மை மணக்கும் நெஞ்சம் எல்லாம்
சுவனம் மணக்கும் விழாக்கள் எல்லாம்
தொங்கல் மணக்கும் தோள்கள் எல்லாம்
சோதி மணக்கும் வீதி எல்லாம்
வாய்மை மணக்கும் வார்த்தை எல்லாம்
மலரே மணக்கும் மஞ்சம் எல்லாம்
வளமே மணக்கும் வாதவூர் வந்த
வள்ளல் முத்தம் தருகவே!

பேச்சில் அன்பு, மூச்சில் குளிர்ச்சி, செயலில் தயவு, குளத்தில் நீர் மலிந்திருக்கும்! சோலைகள் நீண்டு வளர்ந்திருக்கும். வீதியில் தெய்வமணம், நெற்றியில் நீறு, பாடல்களில் சிவமணம் மிகுந்திருக்கும். தூய மேடை, தூயஆடை, மாலை தாங்கும்

தோள்கள், ஒளிவெள்ள வீதி! நெஞ்சில் நேர்மை, வாதவூரில் வளமை! இத்தகு வாதவூர் வள்ளலே முத்தம் தருகவே! 44

சங்கத் தமிழின் பரிபாடல்
சந்தக் கலியும் திருமுருகும்
தருமிக் களித்த குறுந்தொகையும்
தமிழுக்களித்த திருமுகமும்
எங்கும் எதிலும் கலந்தவனாம்
இறைவன் செய்த விளையாட்டும்
இன்பத் துறைதரு இலக்கணமும்
இனிய காஞ்சி, புராணங்களும்
தங்கத் தமிழ்தரு சிலம்புடனே
தரத்தில் மேலாம் இலக்கியங்கள்
தந்த மதுரைச் சொக்கனுணத்
தந்தாய் விடமே பாவி என
வங்கக் கடலைச் சென்றயைா
வைகைக் கரையில் புனிதமுறு
வற்றாக் கருணை வாதவூர் ஈன்ற
வள்ளல் முத்தம் தருகவே!

தமிழ்ச்சங்கத் தலைவனாய் இருந்து சங்க நூல்களைத் தந்த தலைவனாம் இறைவனுக்கு நஞ்சினைத் தந்த பாவி என்று எண்ணி வங்கக் கடலைச் சென்றடையாத வைகைக் கரை வாதவூரரே முத்தம் தருக! 45

ஓடுகின்ற காலங்களில் உருளுகின்ற கோளங்கள்
உட்கலந்த ஐம்பூதங்கள்
ஓரறிவு உயிர் முதல் ஆறறிவு உயிர்வரை
உளதான உயிர்க் கூட்டங்கள்

நாடுகின்ற மனிதனின் பொறிபுலன் முதலான
நாலொன்பான் தத்துவங்கள்
நானிலக் கரு உரிப் பொருள் தொகை
நன்மை தீமைப் பயன்கள்
தேடுகின்ற மெய்ப் பொருள் ஆன்மாக்கள் பாசமெனும்
தேய்வழி விலாத யாவும்
திருவாசக மெனுமொரு நூலுக் கிணையாமோ
திருவாய் மலர்ந்தருளுவாய்!
வாடுகின்ற பயிர் செழிக்க வருகின்ற
மழை போன்று வற்றாத இன்ப ஆறாம்
வளர்திருக் கோவையும் வழங்கியவாதவூர்
வள்ளலே முத்தம் தருகவே!

**காலங்கள், அண்டங்கள், உலகங்கள், உயிர்த்தொகைகள், 36 தத்துவங்கள் இவையாவும் திருவாசகத்திற் கிணையாகா! அத்துடன் திருக்கோவையும் தந்தவா திருவாய் முத்தம் தருக. 46**

வாய்பவளம் தித்திக்கும், வாய் அதரம் தித்திக்கும்
வாய் முறுவல் ஒளிதித்திக்கும்
வாள் எயிறு தித்திக்கும் வாய் அண்ணம் தித்திக்கும்
வாயிலுறை நாத்தித்திக்கும்!
வாய்வழிப் பொழிந்ததிரு வாசகத் தமிழமுதாம்
வழிந்தோடும் மொழிதித்திக்கும்
வற்றாத விஞ்ஞானம் மெய்ஞ்ஞானம் மிளிர்ந்திடும்
வளர் அகவல் தித்திக்குமே!
நோய் பிணி அகற்றுமொரு திருச்சாழல், பொன்னூசல்
நவில் திருப் பாத்தித்திக்கும்
நூறாயிரத் தாண்டுகள் பிறப்பெடுத் தோய்ந்தாலும்
நுண் பொருள் குயில் தித்திக்கும்
வாய்வளர் நிறங்காணும் கண்களும் தித்திப்பில்
மறிகடல் திளைத்து நீந்தும்

வாய்மலர் உமிழ்ந்திடும் உமிழ் நீரும் தித்திக்கும்
வள்ளலே முத்தம் தருகவே!

நினது வாய், உதடு, முறுவல், எயிறு அண்ணம், நாக்கு, மொழி யாவும் தித்திக்கும். மெய்ஞ்ஞானமும், விஞ்ஞானமும் சேர்ந்த திருவாசகம் தித்திக்கும். அத்தகு சிறப்புடைய நீ, தித்திக்கும் உமிழ்நீர் சிந்த முத்தம் தந்தருள்வாயாக! **47**

வேதங்கள் நான்கும் அங்கங்கள் ஆறும்
மேலான புராணம் எட்டும்
மேதினி எங்கணும் வைகறை துதிக்கின்ற
மெய்லிங்க சிவதுதிகளும்
பாதங்கள் காணாமல் திருவடி அழகினைப்
பாடிப் புகழ்ந்து நிற்கப்
பரமனார் நின்பாட் டமுதினில் நெஞ்சைப்
பறிகொடுத்து நின்றார் ஐய!
கீதங்கள் குயில் பாட மயில் எழில் நடமாடக்
கிளரொளி மலர்கள் காட்டக்
கிறிசெய்யும் நாயகன் புகழ்பாடும் வாயமுதம்
கீழ் மேல் வழிந்து கொட்டும்
வாதவூர் ஞானியே! பவக்கடல் தோணியே
வள்ளலே முத்தம் தருகவே!
வற்றாத வைகையின் வாதவூர் மாதவா
வள்ளலே முத்தம் தருகவே!

இறைவன், வேதம் 4, அங்கங்கள் 6, புராணங்கள் 8 சிவாஸ்டகம்(சிவதுதிகள்) போன்றவற்றில் உருகாமல் திருவாசகத்திற்கே உருகினான். மலர் விளக்கேந்தவும் குயில் பாடவும், மயில் ஆடுகின்ற சோலைமிகு வாதவூர் வள்ளலே முத்தம் தருகவே! **48**

மழைதரு முத்தம், கடல்தரு முத்தம்
வயல் வளர் சாலி தருமுத்தம்
வனம் தரு முத்தம், மலர்தரு முத்தம்
வரைகலை கொம்பில் வருமுத்தம்
கழை தரு முத்தம், வளைதரு முத்தம்
கமுகின் முத்தம், கொக்கின் முத்தம்
கதலியர் கழுத்தின் ஒளிர்முத்தம்
இழைபணி முத்தம், குளிர்மதி முத்தம்
இரைமறி உடும்பு தருமுத்தம்
இறந்தும், பிறந்தும்,துறந்தும் மறந்தும்
இனம்வளர் வாழை தருமுத்தம்
இழையணி வகுப்பார் பிழையற மதிப்பார்
இதுவிலை என்பார், நின்முத்தம்
இதுவென எவரும் மதிப்பிட லாமோ
இறைவா முத்தம் தருகவே!

முத்துக்கள் மேகம் முதலான 16 இடங்களில் பிறக்குமென்பர். அம்முத்துக்களுக்கு விலை மதிப்புண்டு. நீதரும் முத்தத்திற்கு (முத்திற்கு) விலையிட முடியாது! இறைவா முத்தம் தருக! 49

தேனே பெருக்கும், எலும்பை உருக்கும்
தெய்வம் மணக்கும் அருள்சுரக்கும்
தெளிவே பிறக்கும் வினையை அறுக்கும்
தேகம் ஜொலிக்கும், திருவமுதம்
ஊனில் கலக்கும், ஞானம் பிறக்கும்
உயிரின் மூல மலங்கெடுக்கும்
ஒளியில் இணைக்கும், பிறப்பை ஒழிக்கும்
உலகில் மரண பயந்தொலைக்கும்
மானே எழுக! பொய்கை புகுக!
மங்கை பங்கன் கழல் புகழ்க!
வருவீர் மகளிர் என்றே அழைக்கும்

மருவா திருவெம் பாவைதரு
வானே! நிலனே! வளியே! புனல் அனலே!
வாழ்வே எங்கள் பெருமானே!
வைகைக் கரைவளர் வாதவூர் புகழ்
வள்ளல் முத்தம் தருகவே!

எலும்பை உருக்கும் இனிய திருவெம்பாவை பாடிக் கன்னிப்பெண்களை-ஆன்மாவை எழுப்பியவா! வாதவூர் வள்ளலே முத்தம் தருக! **50**

# 6. வருகைப் பருவம்

பிள்ளைத் தமிழில் இஃது ஆறாம் பருவமாகும். பெற்றோர் குழந்தையை நடந்து வருமாறு அழைத்து மகிழும் பருவமிதுவாகும். இஃது பனிரெண்டு, பதின்மூன்றாம் திங்களில் நிகழும்.

தேனே! பாலே! கரும்பின் தெளிவே
செந்தா மரை நறவே!
தென்கடல் முத்தே! ஞானத்தின் வித்தே
தேயாத சந்திரனே!
ஊனே! உயிரே! உயிரின் முதலே
உயிரில் கலந்தவனே!
ஓதா துணர்ந்தோய்! ஓதியும் அறிந்தோய்
உன்னிலை கண்ட சிவன்
தானே உன்னைத் தேடியே வந்தான்
தன்னைப் புகழவைத்தான்
தவமது செய்தாய்! பவமது கொய்தாய்
தானெனைக் காத்திடவே
வானே! நிலனே! பிறவே! எனவே
வாஞ்சையில் அழைக்கின்றேன்!
வையம் தழைக்கத் தமிழமுதீந்த
வாதவூர் வள்ளல் வருகவே!

தேன் போன்ற இனிய பொருளாக உள்ளவனே! ஊனே! உயிரே! ஓதாதுணர்ந்தோனே! இறைவனே! உன்னைத் தேடிவந்தான்! ஆசையாய் அழைக்கிறேன்! அருகே ஓடிவருக! 51

சீர்பல மேவும் வாதவூ ரதனில்
செழித்த நல் மலர்க்காவில்

செண்பகம், முல்லை, மல்லிகை, கோங்கின்
செழுமலர் மணங்கொண்டு
தேர்பல ஓடும், ஊர்பல கூடும்
தெருவுகள் தோறுமிகத்
தென்ற லெனுமொரு தெய்வம் உலவிடும்
திருவளர் ஊரதனில்
கார்பல உலவும், குளிர்தரு வளரும்
கருணைக் குணம் நிலவும்
கடவுளின் அருளும் நிலமகள் வளமும்
கட்டியங் கூறிநிற்கும்
பார்முதல் அண்டப் பரப்பெலாம் வணங்கும்
பாண்டிய நாடு முற்றும்
பாச முடனுனை எடுத்து வலம்வரப்
பண்பாய் ஓடி வருக!

செழிப்பான திருவாதவூரிலும், பார் புகழும் பாண்டிய நாட்டிலும் உன்னை எடுத்து வலம்வர விழைகிறேன்! அருகே ஓடிவருக! வாதவூர் வள்ளலே என் அருகே ஓடிவருக! 52

வினையிலே கிடந்தேன்! துயரிலே சுழன்றேன்
வீணருக் குழைத்து நொந்தேன்
விடியலைக் காணேன்! விதிவலைப் பட்டேன்!
வேதனை வாரி வீழ்ந்தேன்!
எனைக்கை தூக்கிட ஒருவரும் வந்திலர்
எனக்கென உறவுமில்லை!
எத்தனை சமயங்கள் அத்தனை நூல்களும்
எனை மிகக் கவர்ந்த தாலும்
மனைதரு சுற்றம், கற்றவர், மற்றவர்
வழிகாட்ட மறந்த தாலும்
மறுகினேன்! நன்னெறி சன்மார்க்கம் என்பதை
வாசகத் தாலு ணர்ந்தேன்!

உனையழைக்கின்றேன்! உனைத் துதிக் கின்றேன்
உவகை எனக்குனைப் போற்றல்
ஊனினை உருக்கும், தேனினும் இனிக்கும்
உருவனே ஓடி வருக!

வினையேன்! விதிவயத்தால் துன்புற்றேன்! எனக்கென எவருமிலர்! சமய நூல்களைக் கற்றேன்! திருவாசகமே சன்மார்க்க நெறியைத் தந்தது. உன்னை அழைக்கிறேன்! என் அருகே ஓடிவருக! 53

வானத்து நிலவிலே குளிரினை எடுத்துமே
வாரிதி அமுதில் கலந்தேன்!
வையமாம் உரலிலே நீஇடித் தாக்கிய
வானுயர் சுண்ணம் கொண்டேன்!
கானத்துச் சந்தனம், கடிமணக் குங்குமம்
கருவேலச் சாறிலிட்டே
கருமையாம் மையினைப் பெருமையாய் ஆக்கினேன்
கண்புருவ மைதீட்டிட
மோனத்தின் வேந்தனே! கானத்தின் தோடியே
முன்னெற்றி, கன்னம் மீதும்
முன்னழகு, பின்னழகு, உன்னழகு, கண்ணேறு
முட்டா வகைப் பொட்டுமிட்டு
வானத்துத் தேவர்கள் வந்துமே வணங்கிட
வைக்கின்ற ஆசையாலே
வாவென் றழைக் கின்றேன்! வாதவூர் வள்ளலே
மகிழ்வோடு ஓடி வருக!

நிலவின் குளிரில் அமுதினைக் குழைத்தேன், திருச்சுண்ணம் சந்தனம், குங்குமம் கலந்தேன்! கண்ணேறு படாவகை பொட்டிட விழைந்தேன்! என்னிடம் ஓடிவருக! 54

வருவாய் என நான் இருகை கொட்டி
வாவா வென் றழைக்கின்றேன்!
வண்ணச் சீறடி மண்மகள் அறிய
மலர்மென் பாதங்கள்
திருமா மணிபூண் சிலம்பிசை பாடச்
சிற்றடி சிவப் பேறச்
சீர்மிகு இடையணி கழுத்தணி யாவன
ஜில் ஜில் என ஒலிக்கக்
கருமா முகிலென அசையும் திருமுடி
காற்றில் அசைந்தாடக்
கவனம் கவனம் என்றிசைப்பது போல்
கழல் மணி எச்சரிக்க
வருவாய்! வருவாய்! வாதவூர் வள்ளல்
வாயமு தொழுகி வர
வந்தால் தருவேன் முத்தம் பரிசாய்
வைகைத் தலைவா வருகவே!

யான் அழைக்கிறேன், முடியாடச்சிலம்பொலிக்கக்
கழல்மணி எச்சரிக்க என்னிடம் ஓடிவருக! 55

விதிக்கின்ற விதியினை வேரறுத்து விட்டவா
விண்ணில் கலந்த தேவா
வேண்டத் தக்க தறிந்தான் அவனென
வேண்டுதல் தவிர்த்த தலைவா
துதிக்கின்ற தேவர்கள் சுயநலத் தோடுதான்
துதிக்கின்றார் என்றுரைத்தாய்
தோய் தயிர் மத்தெனப் பிறவியில் சுழலாது
சோதியில் கலந்தாய் சான்றோர்
மதிக்கின்ற மாதவா! ஞானியர் வாழ்கின்ற
மாமதுரைச் சொக்க நாதர்
மண்கூடை தூக்கினான் உன்பொருட்டென் றாக

வணங்குவன், உன் முகத்தில்
உதிக்கின்ற செங்கதிர் போல ஓர் பொட்டினை
ஒண் நெற்றி தனில் வைத்துமே
உன் எழில் காணுமோர் ஆசையில் அழைத்தனன்
உவகையாய் ஓடி வருக!

பிறவி தவிர்த்தே சோதியில் கலந்தவா! உன் நெற்றியில் பொட்டிட அழைக்கிறேன்! ஓடிவருக! 56

வந்தால் உன்றன் வான்முடி மீதில்
வைரக் கிரீடம் வைப்பேன்
வளர்மதி போன்ற பிறைநுதல் மீதில்
வண்ணவெண் ணீறு செய்வேன்!
சந்தங் கமழும் சிந்தூரப் பொட்டும்
தாடையில் சிறியபொட்டும்
தங்கத் தகடென மின்னிடும் கன்னத்தில்
தற்காப்புத் திலகம் வைப்பேன்
நெஞ்சம், தோள்கள், இடையென எங்கும்
நிறைவாய் மணிபொதி அணிபூட்டி
நித்திய வானவில் எனுமொரு ஊஞ்சலில்
நிமலனே நின்னை ஏற்றி
அந்தம தில்லா ஆனந்தப் பத்தை
அன்போடு பாடு தற்கே
அந்தர மேனகை வந்தனள் தேவா
அருகே நீஓடி வருக!

வருவாயானால் பல்வேறிடங்களில் பொட்டிடுவேன்! கிரீடம் வைப்பேன், வானவில்லெனும் ஊஞ்சலில் ஏற்றி, ஆனந்தப் பத்துப்பாட ஓடிவருக! 57

நல்லவர் போலவே நடிக்கின்ற பேர்கள்
நன்னெறி ஒன்று மறியார்

நாவன்மை யில்லார், பாவன்மை யற்றார்
நன்மை தீமை தெரியார்
அல்லல்கள் ஆயிரம் செய்திடுவார் பிறருக்கு
அறிவுரை கூறிடுவார்
அல்லும் பகலும் கொள்ளை யடிக்கும்
அனைத்து வழியறிவார்
சொல்லும் செயலும் பலகாத தூரமிவர்
தூயரைப் போல வருவார்
தோற்றத்தில் துறவியாய் வாழ்க்கையில் பாவியாய்ச்
சுரண்டலில் கைதேர்ந்தவர்
கல்வியில் கபோதிகள், செல்வத்தில் குபேரர்கள்
கசடரைக் கண்டு கண்ணீர்க்
கடலிலே மூழ்கினேன்! மருந்தாக வந்தவா
களிப்போடு ஓடி வருக!

போலி மனிதர்களைக் கண்டு கண்ணீர் விட்டேன் மருந்தென நீ வந்தனை, மகிழ்விக்க ஓடிவருக! 58

வள்ளல்கள் வாழ்கின்ற வாதவூர் எப்போதும்
வற்றாத வைகை ஓடும்
வளம்பல பெருகுமூர்! நலம் பல வளருமூர்
வளர்சைவ நெறி ஓங்குமூர்
அள்ளற் பழன வரப்பெலாம் நெல்லோடு பொன்
அருமணிகள் உலரு மூதூர்
ஆரொருவர் வந்தாலும் மலர் முகங் காட்டியே
அன்போடு விருந்தூட்டிடும்
உள்ளம் படைத்தவர் கற்பிற் சிறந்தவர்
உறைகின்ற கடவுள் மூதூர்
உறுபகை, பசிப்பிணி, கொலைகளவு நோய்நொடி
ஒருபோதும் காணா நல்லூர்

வெள்ளமும் தீயும் புயலும் எனப் பேசும்
வெங்கொடும் உற்பா தங்கள்
வெருட்டாது தாக்காது நீவந்து பிறந்ததால்
விளையாட ஓடி வருக!

வளம்பல மிகுந்த வாதவூர்! வள்ளல்கள் வாழுமூர்! நீ வந்து தோன்றியதால் இயற்கை உற்பாதங்கள் தோன்றாத சிறப்புடைய ஊர்! அங்கே விளையாட ஓடிவருக! 59

எங்கெங்கும் பொய்புரட்டு, எங்கெங்கும் கொலை களவு
எங்கெங்கும் கற்பழிப்பு,
எங்கெங்கும் வன்முறைகள்,எங்கெங்கும் தற்கொலைகள்
எங்கெங்கும் லஞ்சம், பஞ்சம்
எங்கெங்கும் நிலநடுக்கம், எங்கெங்கும் பேரழிவு
எங்கெங்கும் வியாபாரம் எங்கெங்கும் ஏமாற்று
எங்கெங்கும் விபச் சாரங்கள்
எங்கெங்கு பார்த்தாலும் அதர்மமே ஆடுமால்
ஏனிந்த நிலைமை என்றே
எண்ணியே தூயவர் குமைந்திட அழுதுமே
இருப்பதும் நன்றாகு மோ
எங்கெங்கு பார்த்தாலும் இன்பமே ஓங்கிட
இன்னல்கள் வெளியேறிட
என்குரு நாதனே! அன்போடே அழைக்கின்றேன்
என்னோடு ஆட வருக!

பஞ்சமா பாதகங்கள் உலகில் மிகுந்துவிட்டன. தர்மம் தளர்ந்து, அதர்மம் தலைதூக்கிவிட்டது. இந்நிலை மாறி, நன்னிலை தோன்ற என்னோடு விளையாட வருக! 60

## 7. அம்புலிப் பருவம்

பிள்ளைத் தமிழில் இஃது ஏழாவது பருவமாகும். குழந்தையை ஒக்கலில் வைத்துக்கொண்டு உணவூட்டும் தாய், நிலவைக்காட்டி, அந்நிலவை இக்குழந்தையோடுவிளையாட வருமாறு அழைக்கும் பருவம் இஃது பதினான்கு, பதினைந்தாம் திங்களில்நிகழ்வதாகும். (அம்புலி-நிலவு)

பட்டமா மரந்தழைக்கக் கெட்டமா நிலம்பிழைக்கப்
பகர்திரு வாச கத்தைப்
பாரினில் தேனாறாய்ப் பாயவே அருளிய
பைந்தமிழ் வாத வூரன்
வட்டமா நீர் சூழும் ஞாலத்தின் ஆதியாம்
மாதேவன் வேத முதல்வன்
மண்ணினில் மண்கொட்டும் கூடையொடு கூலியாய்
வந்தனன் நின்பொ ருட்டால்
இட்டமாய் உன்னோடு விளையாட எண்ணியே
இனிய திருவாய் மலர்ந்தே
இங்குவா, இங்குவா, இங்குவா என்னவே
ஏங்கியே அழைக்கின்றனன்!
அட்டமா சித்திகளைப் பட்டமா மங்கலத்தே
ஆனந்த மாயடைந்தோன்
ஆணிப்பொன் அம்பலஞ்சேர் மாணிக்க வாசருடன்
அம்புலி ஆட வாவே!

பட்ட மரத்தைத் தழைக்கச்செய்யும் திருவாசகம் தந்தவா இவன் பொருட்டு மண் சுமந்தான் இறைவன். உன்னோடு விளையாட அன்பாய் அழைக்கிறான். பட்டமங்கலத்தில் அட்டமா சித்திகளைப்பெற்றவன் இவன்! அவனோடு விளையாட அம்புலியே வருவாயாக! (சாமம் - அன்பு) 61

வேகாத காலென்று யோகத்தில் நின்றவர்கள்
வெகுகாலம் மூச்ச டக்கி
விறல்மிக்க வீரர்களாம் ஐம்புல வேடர்களை
வென்றனர் என்றுரைப்பர்
மாகாதல் கொண்டதால் உரோகிணியின் தந்தையார்
வழங்கிய சாபம் போக்க
வணங்கிய சோமனே உன்னைத் தலையிலே
வைத்து வளர் கென்ற சொக்கர்
போகாத மும்மலப் பொல்லா அரக்கர்களைப்
புன்சிரிப் பொன்ற தாலே
பொசுக்கினார் என்றாலும் பொன்னூசல் பாடலுக்காய்ப்
புண்பட்டார் மண்சு மந்துமே!
ஆகாய வீதியில் ஆடியது போதும் நீ
அருள்வாத வூரிறைவன்
அன்போ டழைத்தனன், மறுக்காமல், மறக்காமல்
அம்புலி! ஆட வருக!

யோகிகள் ஐம்புலன்களை வென்றவர்கள்! நீ பெற்ற சாபம் (தட்சன்) போக்கிச்சொக்கன் தலையில் வைத்து வளர்க என்றான்! அவனே மும்மலங்களை எரித்தான்! அவனே இவன் பாடலை விழைந்தான்! அவன் விளையாட அழைக்கிறான்! அம்புலியே ஆட வருவாயாக! 82

தங்கையைக் கொடுத்தவன் பாயலில் படுத்தவன்
தர்மத்தைக் காக்க வந்தோன்
சங்கொடு சக்கரம், தண்டொடும் வில்லொடும்
தரணியில் அவதரித்தோன்
வங்கமெறும் வாரிதியைக் காணாத வையையாம்
வற்றாத தமிழ் ஆற்றில்
மதிதரும் அன்னையார், மாணிக்க வாசகர்தம்
மறையடி பட்ட தென்றும்

செங்கமலத் திருப்பாதம் வைப்பதெவ் வாறென்றும்
திரும்புவர் சீர்த ராமல்
தேவதேவர் தமது திருமுடி மீதுளை
திரும்பவும் மண்சு மந்தால்
அங்கமது துன்புறும் எனுமன்பு மீதுற
அருள்வாத வூரிறைவன்
அன்போ டழைத்தனன் மறுக்காமல் ஆவலாய்
அம்புலீ ஆட வாவே!

திருமால், மணிவாசகர் திருவடி பெற்ற வைகை என்று அதனை மிதிக்க அஞ்சித் திருக்கோயில் திரும்புகிறார். மணிவாசகர்க்காக மண் சுமந்த ஈசன் மீண்டும் மண் கூடையைத் தலையில் வைத்தால் நீ வருந்துவை? மணிவாசகருடன் விளையாட வந்துவிடுக! 63

இருட்டிலே வருகின்ற உன்றனைப் பாருளோர்
ஏற்பரோ திருட ரன்றி
எட்டோ டொன்றுசேர் நாட்களாம் மாதத்தில்
இருமுறை வெறுப்பார் மேலோர்
மருட்டியே வாழ்கின்ற எத்தர்சில ரன்றிப் பிறர்
வணங்கிடார் மலர் சொரிந்து,
வானத்து வீதியில் உனக்கு முன் பின்னென்று
வரும் மூன்று வீடு தண்ணில்
குருட்டுருக் கொண்ட சனி ஏழரை ஆண்டதனில்
கொடுக்கின்ற துன்பந் தீரக்
கொழிதமிழ் தோன்றிய பெருந்துறை நண்ணுவர்
கும்பிடார் உன்னை மதியே!
அருட்டிரு அண்ணலார், வாதவூர் வள்ளலார்
அன்போ டழைக்கின்றாரால்
அரியதொரு வாய்ப்பென்று அவரோடு கைகோர்த்தே
அம்புலீ ஆட வாவே!

இருளில் வருவாய்! அட்டமி, நவமி திதிகளை மக்கள் வெறுப்பர்! எத்தரும் திருடருமே உன்னை நேசிப்பர். உன்னை வைத்தே ஏழரைச்சனியின் துன்பம் கணக்கிடுவர்! அத்துன்பம் தொலையப்பெருந்துறை நண்ணுவர்! மணிவாசகர் உன்னை அழைக்கிறார்! அவரோடு விளையாட வருக! (பேதம்) 64

மாதத்திற் கிருமுறை வளர்வதும் தேய்வதும்
வான்மதி உனக்கன்றி இந்த
மண்ணுலகில் எவர்க்குண்டு, மாதத்தில் ஒருமுறை
மறைந்தும் நீ வாழ்வ துண்டே!
வாதத்திற் சிறந்த எம் மாணிக்க வாசகர்
வளர்கிறார் தேய்வுறார்காண்!
வான்புகழ்ப் பெருந்துறை அந்தண னாய் வந்த
மாதேவன் மறைந்தான் உன்போல்
தீதுறு வினையெலாம் தீர்க்கின்ற சஞ்சீவி
திருவா சகமென்னும் ஓர்
தெய்வீக நூலினைத் தந்தவர் வாதவூர்த்
தெய்வமே! அபலை நீகாண்
ஆதலால் அழைக்கின்றார்! அதெந்துவே எனக் கூறி
அன்பான அழைப்பை ஏற்றே
அவரோடு சிலபோது, பொன்னூசல், சாழலென
அம்புலீ! ஆட வருக!

தேய்வை, வளர்வை, மறைவை! மணிவாசகர்க்கு அஃதிலை! அவரோடு விளையாட வருக! 65

கண்கொட்டும் விண்மீன்கள் பூக்கின்ற வானத்தில்
கடுவேகம் கொண்டு சுற்றும்
கறைகொண்ட மதி நீயும்,மதியென்று பெயர் கொண்டும்
கடுகள வறிவு மில்லாய்
மண்கொண்ட வெண்குடைப் பாண்டியன் பிரம்பினால்
வலியுற மொத்துண் டவன்நல்

வந்தியெனும் தாய் ஈந்த பிட்டுக்காய்க் கையேந்தி
மரத்தடியில் துயில் கொண்டவன்
விண்கண்ட தேவர்கள் துதிவிட்டுப் பெருந்துறையில்
வேணவாக் கொண்டு வந்தார்
விரகர் திரு வாதவூர் வள்ளலின் பாட்டிற்காய்
வெண்பரி மாவிற் றும்மே
பண்கொண்ட பாடலைப் பெற்றனன், இவனோடு
பரிநரி ஆடல் செய்தான்
பரிவு கொண் டுன்னோடு ஆடவே அழைத்தனன்
பான்மதீ ஆட வருக!

மதியே! நீ மதியலி! சிவன் மண்சுமந்தான்! வந்தியின் பிட்டுக்காய்க் கையேந்தினான்! பரிவிற்றான்! திருவாசகம் பெற்றான்! அவர் அழைக்கின்றார்! விளையாடவருக! 66

உயிரை வளர்க்கின்ற பயிரை வளர்த்திட
உரமிடுதல் வழக்க மன்றே!
உன்னை வளர்த்திடப் பொன்னை நிகர்த்திட்ட
உயர்குடித் தமிழ மாதர்
தயிரைக் கடைந்திடுவர், பசுவைத் தொழுதிடுவர்
சாணம் குழைத்தெடுத்தே
தக்க முறையினில் உருட்டுவர், உரமாகத்
தண்மதியுன் மீதும் எறிவர்
அயிரை மீன்கள் கதிரின் ஊடே
அலையும் வயல் சூழ்ந்த
அழகுப் பதிவளர் வாத வூரர்
அழைத்தார் மதியுமுன்னைத்
துயரை ஒழிக்க, மகிழ்வைப் பெருக்கச்
சுற்றி வந்தே தோள் நோக்கித்
தோன்றல் வாத வூரருடனே
தூய மதிநீ ஆடவருக!

உரமிட்டுப் பயிர்வளர்ப்பர்! உன் மீதும் சாணம் எரிந்து துதிப்பர்! வாதவூரார் உன்னோடு விளையாட அழைக்கிறார்! உன் துயரை ஒழிப்பார், தூய மதியே விளையாட வருக! (தானம்) 67

வாரா திருந்தால் கூடல் பெருமான்
மண்ணைத் தூக்கி மேல் வைப்பான்
வைகைக் கரையில் ஓங்கி வளர்ந்த
மரத்தின் மீதும் மாட்டி வைப்பான்
ஆரா இயற்கை ஆசை கொண்டே
அமெரிக்கர் வந்தே வெட்டிடுவர்
ஆம்ஸ்ட்ராங் போந்தே காலால் மிதிப்பன்
அனேகர் வந்தே இடம் பிடிப்பர்
தாராத் திகழும் வைகை மணலில்
தண்டம் விதிப்பர் உன்றன்
தண்ணிய கலைகள் அனைத்தும் வெயிலில்
தகிக்கச் செய்வர்! அதன் முன்னே
வாராய் மதியே! வள்ளல் உன்னை
மகிழ்வாய்க் காப்பார்! உன்கலைகள்
வளரச்செய்வார்! வாத வூரருடன்
மதியே ஆட வருவாயே!

நீ வராவிட்டால், இறைவன் மண்கூடை சுமந்து, உன் மீது வைப்பான்! வைகை மணலில் படுக்க வைப்பான்! மரத்தில் மாட்டிவைப்பான்! கலைகளைத் தேய வைப்பான்! அதற்கு முன் மணிவாசகருடனே ஆடி மகிழ ஓடி வருவாயாக! (தண்டம்) 68

வானமதியே! ஓடித் தேய்ந்தும்
வளரும் மதிநீதான்
வந்தே வைகை மணலில் ஓடி
மகழ்வுடனே சுற்றிக்
கான மயிலாய், இசைக்கும் குயிலாய்க்
கழுக்குன் றினைப்பாடிக்

# 8. சிற்றில் பருவம்

பிள்ளைத் தமிழில் இஃது எட்டாம் பருவமாகும். "சிறுமியர் கட்டி விளையாடும் மணற்சிறு வீட்டை அழித்துக் குறும்பு செய்யற்க" என்று அச்சிறுமியர் வேண்டுவது போன்ற பாடலமைப்பினைக் கொண்ட பருவமிது. இஃது பதினாறு, பதினேழாம் திங்களில் நிகழும்.

வான நாடர் பரவிப் பணியும்
வையம் எங்கே மலர்ந்து வரும்
மாலும் அயனும் தேடிக் காணா
மணக்கும் தூய திருவடிகள்
ஊனார் வாழ்க்கை ஒறுத்தற் கென்றெம்
உரவோய் உமது திருமுடிமேல்
உவந்தே வைத்தார். தீட்சை யளித்தார்
உயர்வாய் அவரைப் பரவுதற்கே
கானார் தேனும் மலரின் மட்டும்
காம தேனின் அமுதோடு
கன்னித் தமிழின் சுவையும் மணக்கக்
கற்றோர் உறைதிரு வாதவூர்த்
தேனார் கொன்றைச் சடையான் மகிழும்
தேவே உன்றன் அடிபணிந்தோம்
தெய்வம் மணக்கும் மணலில் வடித்த
சிறியேம் சிற்றில் சிதையேலே!

மாணிக்கவாசக தேவர்கள் காணாத் திருவடிகளை உன் தலைமீது வைத்துத் திருவடி தீட்சை செய்தான் இறைவன். அத்தகைய உன் திருவடிபட்ட திருவாதவூர் மணலில் யாம் செய்த சிற்றிலைச் சிதைக்காதே! **71**

பல்லவர் கோமான் கல்லால் வடித்த
பார்புகழ் கொண்ட நெடுமாடப்
பாங்கார் கோவில் எழுந்தருளாதே
பண்பாய் இரவுக் கனவதனில்
நல்லவர் ஒருவர் பாசப் பெருக்கால்
நாளும் நாளும் முறையாக
நான்மறை ஆகம விதியின் வழியே
நன்றாய் அமைத்தார் மனத்துள்ளே!
வல்லவர் பூச லாரெனும் அன்பர்
வாகாய் அமைத்த குடில் புகுவோம்
மற்றொரு நாளைக் குறித்திடு கென்றார்
மாலடி காணா மறைவேந்தர்
அல்லமர் அவர்போல் எவருளர் அன்பர்
அத்தி யுரித்தார் அவருடைய
அருந்தமிழ் மண்ணில் சிறுகுடில் வடித்தோம்
ஐயா! சிற்றில் சிதையேலே!

பல்லவன் கற்கோயில் காஞ்சியில் கட்டினான். பூசலார மனக்கோயில் திருநின்றவூரில் கட்டினார். குடமுழுக்கை மாற்றிவைக்க மன்னவன் கனவில் கூறிப் பூசலாரின் மனக்கோயிலிலே குடிகொண்டான். அவருக்காய் யாம் அன்பாய்ச் சிறு கோயில் கட்டினோம்! சிதையேலே! 72

காட்டை அழித்தும், மரத்தை இழைத்தும்
கல்லை உடைத்தும் மலைபிளந்தும்
காரை அரைத்தும், ஊரை அழைத்தும்
கட்டும் கோவில் இதுவன்றே!
ஆட்டை இழந்த ஆயனைப் போல
அன்பால் என்பு நெக்குருக
அன்னை, தந்தை, உற்றார் உறவென
அத்தனை உறவும் விட்டொழித்த உன்

பாட்டைக்கேட்டே, ஏட்டில் தீட்டிப்
பரமன் மகிழ்ந்தான் எனக்கேட்டெம்
பாசப் பெருக்கால் வாசம் பெருக்கும்
பழந்தமிழ் வைகைப் படுகையிலே
ஈட்டும் அன்பால் எடுத்தனம் சிற்றில்
இறைவன் இங்கே வருதருணம்
எம்மையும் எங்கள் அன்பையும் நோக்கி
இறைவா சிற்றில் சிதையேலே!

யாம் செய்தது கல் கோயிலன்று! அன்பால் எடுத்த மணற்கோயில்! அதுவும் வைகையில் எம் அன்பைச் சீர்தூக்கி, எம் சிற்றிலைச் சிதையேலே! **73**

விழுகின்ற போதிலும் நின்பெயர் கூறுவோம்
விடியலில் பாவை படிப்போம்
விண்ணகத் தேவரும் நண்ணவும் மாட்டாத
விழுப்பொருள் உனைப் பரவுவோம்
அழுகின்ற போதிலும் அற்புதப் பத்தினை
அழகாகப் பாடியழுவோம்
ஆனந்த மாலையில் நீ கண்ட காட்சியை
அடியோங்கள் காண விழைவோம்!
தொழுகின்ற தூயராய் நேயராய்ச் சேயர்கள்
தொழுகுலம் அமைக்க லுற்றே
தூமணல் தெள்ளினோம், அள்ளினோம் திருவிடத்தைத்
தூவினோம், கோலமிட்டோம்
எழுகின்ற பிறப்பெல்லாம் உமக்கே நாம் பணிசெய்வோம்
எம்பிரான் தொழுது வாழ்வோம்
ஏழையேம்! மலர்போன்ற விரல்களால் ஆக்கினோம்
ஏந்தலே! சிற்றில் சிதையேலே!

எச் சூழலிலும் உன்னையே தொழுவோம் அழுவோம் திருவாசகம் ஓதுவோம் எழுகின்ற பிறப்பிலும் உன்னையே துதிப்போம் யாம் செய்த இச் சிற்றிலைச் சிதையேல் ஐய! **74**

வேதியர் கூடியும் நான்மறை பாடியும்
விளக்கிட லுற்ற போதும்
மெய்ம்மயிர் பொடிப்பதும் கண்ணீர் வடிப்பதும்
மெய்யன்பர்க் கெய்த வில்லை
பேதையர் பெதும்பையர், மங்கையர் மடந்தையர்
பிரார்தனைப் பத்தை ஓதிப்
பேரானந்தம் பெருகுவர் உருகுவர்
பித்துற்ற நிலை எய்துவர்
ஆதியாம் பாதமலர் சூடுவர், ஆடுவர்
அதிசயம் காண்க என்பர்
அத்தகு வாசக அமுதினைத் தந்தவா
அவருறை கோவி லொன்றைத்
தாதியர், செவிலியர், நற்றாய் எனப்பலர்
தகு வழி காட்டி நிற்கத்
தகவாய் எடுத்தோம் பகுவாய்த் தொழுகுலம்
தாள் கொடு சிதையேல் ஐய!

வேதம் படித்தால் மெய் உருகுவதில்லை! திருவாசகம் படித்தால் அனைத்தும் உருகும்! பாடுவோர் பித்துற்ற நிலை எய்துவர். நீ பாடிய இறைவனுக்காய்க் கோயில் எடுத்தோம்! இதனைச் சிதையேல்! 75

திருப்பொற் சுண்ணம் இடித்துக் கொணந்தோம்
திருப்பூ அல்லி, கொன்றைமலர்
செடி கொடி, கோடு, நீர்நிலம் எங்கும்
சிரிக்கும் பூச்சுமந்தோம்
நெருப்பிற் புகையும் தூபம் தீபம்
நிறைவாய் நிறைத்தோம்; அபிஷேக
நெய்யும், பாலும், தயிரும் தேனும்
நிறைகுட வைகை நீர்தந்தோம்
பொருப்பில் முளைத்த சிவலிங்க உருவைப்
பொறுப்பாய் அமைக்கக் கருவறையும்

பொருந்தும் படியாய் அமைத்திட எண்ணிப்
புணர்ச்சி அருள்பத் தோடு
திருத்தோள் நோக்கம் பாடிக் கொண்டே
திருவளர் கோவில் சமைத்தோம்யாம்
செழும்பொன் மணியே! திருவாதவூரா!
சிறியேம் சிற்றில் சிதையேலே!

பூசனைப் பொருள்கள் கொணர்ந்தோம்! திருவாசகத்தினை முற்றோதியபடி இக் கோயிலைக் கட்டினோம்! சிதையேல் ஐய! **76**

குடவரை மீதே படர்திரி கொண்டல்
குடகடல் மீதிற் பாய்ந்தோடிக்
குரைகடல் நீரைக் குடலினில் தேக்கிக்
குடமலை முகட்டில் பொழிவதனால்
வடவரை பொங்கி வழிந்திடும் கங்கை
வைகை என்றே பேர்தாங்கி
மலையின் இழிந்தும் மதுரை புகுந்தும்
வாதவூரின் மருங்கணைந்தும்
தடபுடலென்றே சந்தன மரமும்
தேமா தேக்குப் பலவுமுடன்
தள்ளிக் கொண்டே வந்தே யாமும்
தகவாய்க்கோவில் சமைத்திடவே
திடமுடன் ஒன்றும் அறியாஇளையோம்
திருமணல் கொண்டே சிந்தையொன்றிச்
சிற்றில் சமைத்தோம்! பற்பல அமைத்தோம்
தேவே சிற்றில் சிதையேலே!

மேகம் குடகடல் நீர்கொண்டு குடமலையிற்பெய்தது! வைகை பெருக்கெடுத்து மரங்களை உருட்டி ஓடி வந்தது. சிறியேம் யாம் மணலில் கோவில் செய்தோம்! சிதையேலே! **77**

அடிமுடி அறியா அயனும் மாலும்
அரனைப் போற்றித் துதித்தாலும்
அடியார் அறுபத்து மூவரும் சேர்ந்தே
அவனடி நெஞ்சிற் பதித்தாலும்
முடிமதி சூடி நதியணி தேவன்
முப்புரம் எரித்த முக்கண்ணன்
முதலும் முடிவும் இல்லா தொருவன்
மூவுலகிற்கும் முதலானோன்
கடிமதில் மதுரைக் குடிபுகல் கருதிக்
கைம்மணல் கொண்டே கட்டுவித்த
கவின்மிகு இல்லம் புகுவான் என்ற
கனவுகளோடே குடில் கண்டோம்
பிடிபிடி என்றே பிடித்ததோர்பத்தில்
பித்தனைக் கட்டிப் பிடித்திட்ட நீ
பேதையாம் பெண்கள் கட்டிய இல்லம்
பிழையாய்க் கருதிச் சிதையேலே!

தேவர்கள் துதிக்கும் தேவன்! மதுரை புகவரின் எம் குடிலில் எழுந்தருள வேண்டிக் கட்டிய இச் சிற்றிலைச் சிதையேலே!

**78**

சூரியக் கதிரில் சுழலும் துகளாய்த்
தோன்றும் கோடி விண்மீன்கள்
சூரியத் தாயைச் சேய்போல் சுற்றிச்
சுழலும், நகரும் நவகோள்கள்
வீரிய விதையில் முளைவிடும் செடிபோல்
வினையில் உழலும் உயிர்க் கூட்டம்
வேடுவன் வலையில் மாட்டிய மான்போல்
விழிநீர் பெருக்கும் ஆன்மாக்கள்
சீரிய வழியில் செலினும் விதியில்
சிக்கித் தவிக்கும் நல்லோர்கள்

தெளிவும், அறிவும் பெறுவதற்கென்றே
ஒளியாய் வாத வூர்வந்தோய்!
நேரிய வழியும் கூரிய மதியும்
நிறைவாய் வாய்க்கப் பெற்றவரே!
நெஞ்சில் இனிக்கும் திருவா சகக்குடில்
நெட்டித் தள்ளிச் சிதையேலே!

விண்மீன்கள், கோள்கள், உயிர்க் கூட்டம் ஆன்மவிழிப்பு, இவையறிந்த நல்லோர் போற்றும் வாதவூர்! திருவாசகக் குடில், என்னும் இச்சிற்றிலைச் சிதையேல்! **79**

வைகை தந்த முத்தினை அடுக்கிநல்
வைரம் கொண்டு கால்நிறுத்தி
மணலைப் பிசைந்து சுவரெடுத்து மேல்
மாடமெங்கும் துகிர்பரப்பிச்
செய்தோம் இந்தச் சிறிய குடிலைச்
செம்பொன்னாலே கதவிழைத்துத்
தெருவைக் கழுவிக் கோமே தகத்தால்
திருச்சுற் றெடுத்துக் கோலமிட்டோம் !
மைபடி திங்கள் பானையை வைத்தே
மாசறு காராம் பாலிட்டோம் !
வருகதிர் தன்னைக் கோபுர மாக்கி
வலம் வரும் கோள்களை விளக்காக்கிச்
செய்தவம் என்றே திருவா சகத்தைச்
திருச்சாந்திட்டும் இவண் வைத்தே
தினமும் துதிக்க விழைகின்றோம் எம்
தேவா சிற்றில் சிதையேலே!

நவமணிகள் கொண்டு கட்டிய இச்சிற்றிலில் திருவாசகத்தை வைத்துத் துதிக்க இருக்கின்றோம்! இச்சிற்றிலைச் சிதையேல் தேவா! **80**

# 9. சிறுபறைப் பருவம்

இஃது பிள்ளைத் தமிழில் ஒன்பதாம் பருவமாகும். குழந்தைகளின் விளையாடல்களில் பறையடித்தல் ஒன்று. "பறையடித்து விளையாடி மகிழ்க"என்னும் பொருளமைந்த பாடல்கள் இடம்பெறும் பருவம் இஃது பதினெட்டு, பத்தொன்பதாம் திங்களில் நிகழும்

எல்லையில் லாத நுண்ணறி வாளனே!
எழில்வாத வூரிறைவ!
இகலோக வாழ்வும் பரலோக நுகர்வும்
இறையிடம் இரவாதவா!
கல்லாரும், மெய்ஞ்ஞானம் இல்லாரும் புவி மீது
கைதொழும் கருணையாளன்
கற்பனைக் கெட்டாத அற்புதன் உன்பாட்டைக்
கைகட்டிக் கேட்கவந்தான்
நில்லாத உலகிலே செல்லாத புகழ்கொண்டு
நிலமிசைப் புனித மானோய்!
நெஞ்சில் நிலைக்கும், என்பினை உருக்கிடும்
நின்னெழில் வாழ்க்கையன்றோ?
தில்லையாம் பதியிலே விண்ணிலே கலந்தவா
சிறுபறை முழக்கியருளே!
தேவனே! வாதவூர் நாதனே! கைகளால்
சிறுபறை முழக்கியருளே!

பேரறிவாளன்! எதனையும் இரவாதவன் இறைவன், உன் பாடல் கேட்க மானுட உருவில் வந்தான். நிலையான புகழ்கொண்டு, தில்லையில் வானில் கலந்தவா சிறுபறை முழக்குக!

81

சங்கரன் என்னும் பேரருளாளன்
தன்னை உனக்கீந்தனன்
தந்துநற் சீடனாய் உன்றனைக் கொண்டனன்
சமரச வியாபாரிகாண்!
அங்கவன் செயலினை எங்ஙனே ஏற்பதென்
றவனிடம் வினாக்கேட்டனை!
அன்னவன் அறிவும் நின்னுடை அறிவும்
அறிவிலே சமானமாமோ?
இங்கவன் உன்னைச் சிவமாக்கி ஆண்டான்
இல்லை எவ் வேறுபாடும்
இருவரும் பரிமாறிக் கொண்டாலும் ஒருவரே
என்பதே உண்மையாகும்!
பொங்கு நீர் உலகத்தில் இவ்வுண்மை யாவரும்
புரிந்திடச் செய்யவேண்டிப்
பூவுல கோரெல்லாம் கேட்டிடக் கைகளால்
பூம்பறை முழக்கியருளே?

இறைவனும் நீயும் ஒன்றே! (அத்துவிதம்) இத்தத்துவத்தை உலகோர் கேட்கப் பறை முழக்கிடுக! 82

நரிகளை எல்லாம் பரிகள தாக்கி ஓர்
நடுநிசி நரியாக்கி
ஞாலத் துள்ளன நிலையில தென்ற ஓர்
ஞானம் எமக்குணர்த்தி
விரிநீர் உலகில் நரிபரி மூலம்
விளக்கினை அருளாளா!
விச்சுக்கேடு பொய்க்கு ஆகாதென்று
விடுத்தனை எனையென்றும்
எரியாய்க் கனன்று புலம்பிக் கலந்தாய்
எழில்திருப் பெருந்துறையில்
ஈசா! நேசா! ஆரூர் வாசா
எனை ஏன் விடுத்தனையோ?

புரிவாய் நின்னருள் புகுவனோ நின்னிடம்
பொருளாக வேணுங்கொடு
விற்றுக் கொள் ஒற்றிவை என மீண்டும் கைகளால்
விளங்கிடப்பறை கொட்டுகவே!

நரிபரி நாடகத்தில் நிலையாமையை உணர்த்தி, இறைவனின் உடைமை என்றுன்னை உணர்த்தினை! இதனை உலகோர் விளங்கிக் கொள்ளப் பறை முழக்குக. 83

**நம்பா உன்போல் நானில மீதினில்**
**ஞானியர் யாரு முண்டோ?**
**நாதனே உன்னைத் தேடியே வந்தான்**
**ஞாலமுங் கண்ட துண்டோ?**
**வம்பாம் இந்த உடலினை நீக்கியே**
**வானுல கீய வேண்டி**
**வந்தியின் பிட்டினை உண்டனை கூலியாய்**
**மண்கூடை கொண்டுவந்தாய்**
**எம்பெரு மானே! ஈசனே! என்னை நீ**
**ஏற்றருள் புரிய வேண்டும் !**
**இன்றெனில் என்குறை என்றுரை என்றனை**
**இருசுடர்க் கடவுள் முன்னே!**
**கொம்ப ரில்லாத குலக்கொடி போலக்**
**குமைந்துரை செய்த யாவும்**
**கோமானின் செவிகளால் மீண்டொரு முறைகேட்கக்**
**கோலப் பறையை முழக்குகவே!**

**நம்பனாம் நாதன் முன் கொம்பில்லாக் கொடிபோலத் துவண்டதனை மீண்டும் ஒருமுறை கூறி இப்பறையை முழக்குவாயாக! 84**

மண்ணுலகம் ஒரு நாடக மேடையதில்
மானிடர் நடிகர்களே!
மாற்றுமதத்துப் போப்பையர் கூட உன்
வாசகத்தில் கலந்தார்
கண்ணுத லெந்தையுன் கோவையும் கேட்டிடக்
காசினிக் கிறங்கிவந்தான்
கற்கோவில் கட்டியும் சொற்கோவில் கொட்டியும்
கள்வனைக் களிக்கவைத்தாய்
பெண்ணாண் அலியெனப் பேசுமப் பெரியவன்
பித்தருன் மத்தனாகிப்
பிச்சனாய் நின்றனன், வாயமுத வாக்கினைப்
பிரியமாய்ப் படியெடுத்தான்
அண்ணலே! மாமதுரை ஆதியே! குற்றால
அருமறைப் பொருளேயென்று
அழுதனை! தொழுதனை! கலந்தனை உலகறிய
அரும்பறை முழக்கியருளே!

உலகம் நாடக மேடை, மனிதர்கள் நடிகர்கள்! நீ கண்ணுதலானுக்குக் கற்கோவிலும் சொற்கோவிலும் கட்டினை! உன் வாசகத்தையும், கோவையையும் படி எடுத்துக்கொண்டான்! அவனுள் கலந்த நீ அச்செய்தி உலகறியப் பறையை முழக்கியருள்க! 85

அறுவகைச் சமயங்கள் எழுவகை மதங்கள்
ஆரியர் திராவிட ரெனும்பேதம்
அயலவர் கொணர்ந்த சிறுசிறு மார்க்கம்
அதனால் விளைந்த பெருஞ்சேதம்
எறும்பிடை நாங்கூழ்ப் புழுவென மக்கள்
இறைநிறை உணராத் தடைகளுடன்
ஈனச் செயல்புரி சமயத் தலைவர்கள்
இறைவன் பெயரால் படுகொலைகள்

வேறுவே றுருவில் சமயப் பிணக்குகள்
விளையும் இந்தச் சூழலிலே!
வேண்டும் சமய நல்லிணக்கம் மேலாம்
வேத நெறியும் விளங்கிடவும்
சிறுமைச் சமயங்கள் வாய்களை மூடவுன்
திருவாசகத்தைச் சிந்திக்கவும்
திக்குக ளெட்டும் சன்மார்க்கம் ஓங்க நீ
சிறுபறை கொட்டி முழக்குகவே!

சமயக் காழ்ப்பு நீங்கிச் சமய நல்லிணக்கம் தோன்றத் திக்குகள் எட்டும் கேட்கத் திருவாசகம் கூறும் சன்மார்க்க நெறி ஓங்கச் சிறுபறை முழங்குக! **86**

சிவாயநமவெனத் தினம்தினம் ஓதநீ
செய்த தவந்தான் எதுகூறாய்?
செத்திலாப் பத்தில் செத்திலேன் அந்தோ
திரிதருகின்றேன் எனப் புகன்றாய்!
அபாயம் நீக்கி அபயம் தருவாய் என்
ஆரமுதேயுன் அடைக்கலமே
அழுக்குடை மனத்தோ டடைந்தேன் உன்னடி
ஆதரித் தேந்தல் உன்கடனே!
உபாயம் எல்லாம் உன்னடி யன்றியான்
ஒன்றும் வேண்ட கில்லேன்
உன்னரு ளன்றி வேறெதும் வேண்டேன்
உடையாய் நானுன் உடைமை, நம
சிவாய! தில்லைக் கோவே! திருவா ரூரா
திருக்கழுக்குன்றையா, நீ
தேன்மிகு மலர்போல் மெல்லிய விரலால்
சிறுபறை முழக்கி யருளுகவே!

நமச்சிவாய வாழ்க எனச் சொல்லிய நீ, அவன் அருள் வேண்டிச் சிறு பறை முழக்கியருள்க? **87**

முத்தாய் விளங்கும் மூல முதல்வன்
முன்னிரு உருவானோன்
முத்தமி ழென்னும் பக்தி மொழியில்
மும்மைப் பொருளானோன்
இத்தரை போற்றும் தத்துவ மறையில்
எண்ணிடும் நான்கானோன்
இயம்பிடும் பூதம் ஐந்தெனக் கலந்தோன்
எழிற்சுவை ஆறானோன்
சித்தம் இனிக்கும் வாசகம் கோவை
செப்பித் தாய் தன்னைத்
தேடிடும் சேயாய் நாடிடச் செய்தாய்
தேனார் எழுபண்ணில்
அத்தன் மகிழ, இத்தரை களிக்க நீ
அதிசயப் பாப்பாடி
அகிலத்துயிர்கள் இறைநிலை காண
அழகாய்ச் சிறுபறை முழக்குகவே!

ஒன்றாய், உருவில் இரண்டாய், தமிழில் மூன்றாய் மறையில் நான்காய், பூதங்கள் ஐந்தாய், சுவையில் ஆறாய், இசையில் ஏழாய்த் திகழ்வோன் புகழ்பாடி, உலக உயிர்கள் இறைநிலை காணச் சிறுபறை முழக்கியருள்க. **88**

ஒன்றும் போதா நாயான நானும்
உலகிடைப் பற்பல துயருற்றேன்!
உத்தமர் என்றே மனிதரை நம்பினன்
உழைப்பை விழலுக் கிறைத்திட்டேன்!
என்றும் இன்பம் கண்டது மில்லைநான்
இன்னல் பிறருக் கிழைத்ததில்லை
என்வினை யான முன்வினை யதனால்
எலும்பை உருக்கு முன் வாசகத்தை
நன்றே படித்தேன்! அமுதினைக் குடித்தேன்!
நரம்பும் எலும்பும் அதுவானேன்

நாதனே! வாதவூர் வேதனே! உன்றன்
நற்பெயர் பேசி நலமுற்றேன்
குன்றே யனைய தேவே! வையைக்
கோவே சிறுபறை முழக்குகவே!
குவலயமெங்கும் சன்மார்க்கம் ஓங்கக்
கொட்டியே சிறுபறை முழங்குகவே!

நாயனையேன் தீயரை நம்பினேன்! விழலுக்கு இறைத்து வீணருக்கு உழைத்தேன்! உன் திருவாசகத்தைப் படித்தே உய்ந்தேன். உலகம் சன்மார்க்கம் காணச் சிறுபறை மூலம் முழங்கியருள்க! 89

பழந்தமிழ் நாடாம் பாண்டிய நாட்டில்
பாலும் தேனும் ஓடிவரும்
பண்போ டன்பும், பரிவும், கனிவும்
பரம்பரையாக ஊறிவரும்
கழங்கென முத்தை வைகையின் அலையும்
கரையினில் வாரி வீசிவரும்
கற்போ டறிவும் வீரமும் நாணும்
மங்கையர் குருதியில் கலந்துவரும்
பழங்களில் கூடச் சிவமணங் கமழும்
பறவைகளு முன் தமிழ்பாடும்
பகலிரவாக விழவுகள் காணும்வெம்
பகையும் பசியும் காணாதே!
அழகென உடலில் உள்ளன யாவும்
ஆசையினாலே அவணுறையும்
ஆதவூர் என்னும் வாதவூர் வள்ளல் உன்
ஆனந்தப் பறையை முழக்குகவே!

பாண்டியநாடு பாலும், தேனும் ஓடும் வளமான நாடு. வைகை முத்துக்களைக் கழங்கென வீசி விளையாடும்! பழங்களில் சிவமணம் கமழும்! பகை, பசி இல்லை! அழகான வாதவூர் வள்ளலே! ஆனந்தமாகப் பறை முழக்கி விளையாடிடுக! 90

# 10. சிறுதேர்ப் பருவம்

பிள்ளைத் தமிழில் இது பத்தாவது பருவமாகும். மழலை விளையாடல்களுள் சிறுதேர் செய்து உருட்டி விளையாடுதல் ஒன்று. அவ்வாறு சிறுதேர் உருட்டி விளையாடுக என்னும் கருத்தமைவுடைய பாடல்கள் இப்பருவத்தில் இடம்பெறும். இஃது இருபது, இருபத்தொன்றாம் திங்களில் நிகழும்.

பொய்மை எல்லாம் புறம்போக, நிலவும்
புரட்டும் திருட்டும், போயொழியப்
புதுமை, மெய்ம்மை ஞான மெல்லாம்
பூத்துத் தெய்வ அருளோங்கச்
சைவ நெறியும் தமிழ்நெறியும் இந்தத்
தாரணி எங்கும் தழைத் தோங்கத்
தயவும், கொடையும், அறமும் புகழும்
தக்காரிடத்தே நிறைந்தோங்க!
வைகைத் தாயின் வயலெல்லாம் செந்நெல்
வளமும் நலமும் செழித்தோங்க
வறுமை, பிணியோ டுயிர்த் தொகுதிதம்
வாட்டம் அவலம் விடைகொள்ளத்
தெய்வக் கோவை பாடிய தேவே
திருவெம்பாவை தினம் மணக்கும்
திருவாத வூரின் திருவீதி தனில் நீ
சிறுதேர் களிப்பாய் உருட்டுகவே?

நல்லன விளையவும் தீ யன அகலவும், திருவாத வூரின் திருவீதியில் சிறுதேர் உருட்டி விளையாடி வருக! 91

அருமக ளான மலைமகள் பாகன்
அண்டபகி ரண்ட மெல்லாம்

ஆக்கியும், தேக்கியும், போக்கியும் உள்நின்று
அரசாட்சி செய்யும் தேவன்
திருமொழி யான தமிழ்மொழி தந்தோன், உன்
திருமொழி படியெடுத்தோன்
தேவாரம் முதலா ஆறாயிரம் பாடல்
திருச் செவி கேட்டுவந்தோன்
கருஉயி ராகுமுன் பரிணாமக் கோட்பாட்டுக்
கன்னல் கவி விழைந்தோன்
கருவறைக் கோவிலாய் நீ செய்த பெருந்துறைக்
கலைக் கோவில் உவந்தானன்றே!
அருமறை போற்றிடும் தேவனுக் குவப்பான
அருந்தமிழ் வாச கத்தை
அளித்தவா! கழுக்குன்று வீதியில் மகிழ்வோடு
அருட்டேர் உருட்டி யருளே!

உலகைப் படைத்துக் காப்போன்! திருமுறைப் பாடல்களைக் கேட்டு மகிழ்ந்தோன்! நீ கட்டிய பெருந்துறையில் கோவில் கொண்டேன்! அவன் மகிழத் திருவாசகம் தந்தவா? திருக்கழுக்குன்றத் திருவீதியில் சிறுதேர் உருட்டியருள்வாயாக! **92**

பவமது நீங்கத் தவநிலை ஓங்கப்
பரிபவ நிலை செழிக்கப்
பக்குவம் மிக்கவர்கள் தக்கநெறி என வெண்ணிப்
பழந்தமிழ்ச் சைவம் சார
நவகோள் யாவர்க்கும் நன்மை யளித்திட நீ
நவின்ற திருவாசகத்தை
ஞாலத்தில் உள்ளோர்கள் யாவரும் மனமொன்றி
நாவினால் ஓதியுய்ய
அவகதை கள்ஓர் ஆயிரம் கோடியாம்
அவனிசீர் கேடு காண
அழகுக் குறிப்புகள் சமையல் குறிப்பென
அறிவு நூல் ஒழியச் தூய

சிவபுராணம் முதல் அச்சச்சோ ஈறாகத்
தீந்தமிழ் தந்த தேவா
தெய்வம் மணக்கும் பெருந்துறை வீதியில்
திருத்தேர் உருட்டி யருளே!

பவத்துயர் நீங்க, தவம் ஓங்க, நவகோள்கள் நன்மையளிக்க, அவ நூல்கள் அழியத் திருவாசகம் தந்தவா! திருப்பெருந்துறை வீதியில் சிறுதேர் உருட்டியருள்க! 93

கடலே அனைய ஆனந்தம் என்னும்
கடலில் குளித்தாய், எல்லோரும்
கடவுள் உணர்வைப் பெறுவதற் கென்றே
காருண்யத் திரங்கல் தந்தாய்! எம்
இடராம் பிறவி ஒழிவதற் கென்றே
எண்ணப் பதிகம் இயம்பினையே!
என்பெலாம் உருக, உருக, உருக,
இயம்பினை அற்புதப் பத்தம்மா!
தொடரும் ஆன்மப் பயணத்தைக் காட்டச்
சொன்னது தானே யாத்திரையாம்
சுட்டறு வென்று திருவே சறவும்
சொந்தம் சிவமே என உரைத்தாய்
அடரும் மலத்தை அறிந்திட வென்றே
அச்சோப் பதிகம் பாடினவா!
அண்ணல் ஆரூர் வீதி தனிலுன்
அழகுத் திருத்தேர் உருட்டுகவே!

சிவானந்தக் கடலில் குளித்தவா! திருவாசகம் தந்தவா! திருவாரூர் வீதியில் சிறுதேர் உருட்டியருள்க! 94

பேராயிரம் உடைய பெருமானை நொடியும்
பிரிந்திட விரும்பாமல்
பேச்சுரை அறுத்தாய், புல்லிப் புணர்ந்தாய்
பிரிவிலா தொன்றானாய்!

வாரா வழியை மண்ணுல கோர்பெற
வழிவகை கண்டுரைத்தாய்
மருளும் நெஞ்சைப் பெருந்துறை மருந்தால்
மாயப் பிறப்பறுத்தாய்
ஊராார் உலகோர் சிரிப்பர், பழிப்பர்
உடனழைத் தேகென்றாய்
ஒல்லும் தில்லை விண்வெளி தனிலே
ஒன்றாய்க் கலந்திட்டாய் !
சீரார் பெருந்துறைக் கோவில் சமைத்தனை
தென்னவன் அறம் விளங்கும்
செந்தமிழ் மதுரை வீதியில் தங்கத்
திருத்தேர் உருட்டி யருளே!

பெருமானைப் பிரியாமல் உலகோர் பிறப்பறுக்க வழிசொன்னவா! தில்லையில் கலந்தவா! திருமதுரை வீதியில் திருத்தேர் உருட்டியருள்க! 95

புற்றில் வாழ் அரவிற்கும் பொய்யர்தம் செய்கைக்கும்
புலால் நாறும் கருவிகட்கும்
பூவையர் சொல்லுக்கும் பொடி செயும் கனலுக்கும்
பொல்லாப் பிறவி நோய்க்கும்
கற்றவர்கள் புகழ்ச்சிக்கும் மற்றவர் இகழ்ச்சிக்கும்
கரடி புலி சிங்கத்திற்கும்
ககனத்தின் உருமுக்கும் அரவத்தின் நஞ்சிற்கும்
காலனின் கயிறு தனக்கும்
கொற்றவன் கொடுமைக்கும், உற்றவர் கடுமைக்கும்
கோளரி உழுவை தமக்கும்
கொலை களிறு பிறப்பிறப் பின்னோ ரன்னவாம்
கொடுஞ்செயலுக் கஞ்சி டாது
தேற்றலான் திருவடிக் கன்பரல் லாதவர்க்கும்
சிவநெறி சாராதார்க்கும்

திருநீறு அணியாத தீயர்க்கும் பயந்தவா
திருத்தேர் உருட்டியருளே!

தீயன எதற்கும் அஞ்சாமல் திருநீறு அணியாதவர்களுக்கே அஞ்சியவா! சிறுதேர் உருட்டியருள்க! 96

பாசவே ரறுக்கும் பழம்பொருள் தன்னைப்
பற்றுமா பற்றிக் கொண்டாய்?
பாண்டிநன் னாடுடை ஆட்சியில் நீயுமோர்
பண்புடை அமைச்சனானாய்!
பூசனை உகந்திடும் நாதனின் தாளினைப்
புகலிட மாகக் கொண்டாய்!
பொன்னவன் நின்னுடை மேன்மைக் கிரங்கித்தன்
பூங்கழல் காட்டி நின்றான்!
வாசனைப் பொருள்களும் மலர்களும் தாங்கியே
வழியெங்கும் வளம் செய்திடும்
வைகையாம் தமிழ்க்கொடி அமுதுண்டு விளங்கிடும்
வாதவூர் தன்னில் தோன்றித்
தேசுடை ஈசனாம்! சித்திகள் தந்தோனைச்
சிக்கெனப் பிடித்துக் கொண்டோய்
திருவளர் பட்ட மங்கல வீதியில்
சிறுதேர் உருட்டி யருளே!

பூசனை உகந்த நாதனைப்பற்றிப் பிறப்பறுத்தோய்! அட்டமாசித்தி பெற்ற பட்டமங்கல வீதிகளில் சிறுதேர் உருட்டி மகிழ்க. 97

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
வானுளோர் தலைவ னாகி
வரையாகிக் கடலாகி, மரமாகிப் புல்லாகி
மன்னுயிர் அனைத்து மாகி

ஊனாகி உயிராகி உண்மையாய்ப் பொய்யாகி
உலகங்கள் கோடியாகி
உறவாகிப் பகையாகி உளவாகி இலவாகி
உருவமும் அருவு மாகித்
தேனாகிப் பாலாகி மருந்தாகி விருந்தாகிச்
செல்வங்கள் அனைத்து மாகிச்
செலவாகி, வரவாகிப் பலவாகி ஒன்றாகிச்
செம்பொருளாகி நிற்கும்
கோனாகி நின்றவனைத் தானாகிக் கலந்தவனைக்
குதிரையில் வரவைத் தவா
கொழிதமிழ்ச் சீர்காழி வீதியில் தொடை நாறும்
குறுந்தேர் உருட்டி யருளே!

எல்லாமாகி நிற்பவனில் இணைந்தவா! சீர்காழி வீதியில் சிறுதேர் உருட்டியருள்க! 98

சக்கரம் நான்கதும் முதல் நான்கு அகவலே
தாங்கிடும் அச்சாணியாய்ச்
சதகமும், விண்ணப்பம் கடையாணி பாவை
தகவுடை மேடை யாக
அக்கரத் தூணாக அம்மனை, வழிபட
அம்பொற் சுண்ணம் கொண்டே
அழகான மாலையாய்க் கோத்தும்பி, மேருவாய்
அரிய தெள்ளேணம் கொண்டு
கைக்கரச் சாழலும், உந்தியார் நோக்கமும்
கவின்பெரு கலசமாக்கிக்
கனியாய்க் குழைதல் பிடித்த பத்தென்பன
கயிறென விளங்கித் தோன்றத்
தக்கதொரு தேரிது! தணல் அண்ணா மலைநற்
சான்றோர்கள் தவமிருக்கும்
சாறுமிகு வீதியில் வானவர் வலம் வரத்
தமிழ்த் தேர் உருட்டி யருளே!

திருவாசகப் பதிகங்களே தேரின் பாகங்களாக விளங்கும் சிறுதேரினைத் திருவண்ணாமலைத் தெருக்களில் உருட்டியருள்க! 99

அட்டமா சித்திகள் அனைத்தையும் நின்தவ
ஆற்றலால் பெற்றே தேவே!
ஆதார வீட்டினில் அனுபவ உணர்வுகளை
அப்பன் உனக்கருள வேண்டிப்
பட்டமா மங்கலம் எனப்புகல் ஊரிலே
பாங்காய் அளித்தான் ஐய!
பாண்டிய நன்னாட்டு வாதவூ ரதனிலே
பாதச் சிலம்பொலித்தான்!
அட்டமா மூர்த்தி அழகனாய் வந்துமே
அற்புத அமுதளித்தான்
ஆறுகோடி மாயமா சக்திகள்
அனைத்தையும் கருவறுத்தான்
திட்டமாம் தில்லையில் ஊமைக்கு வாய் தந்தோய்
திருத்தேர் உருட்டி யருளே!
சீர் வளர் உத்தர மங்கைநகர் வீதியில்
சிறுதேர் உருட்டியருளே!

அமுதமும், சித்துக்களும் அளித்தவன், அற்புதம் செய்தவன்! அவன் புகழ்பாடித் திருஉத்திரகோச மங்கை வீதியில் சிறுதேர் உருட்டியருள்க! 100





# ஆசிரியரின் வாழ்க்கைக் குறிப்பு

## முனைவர் மூ.அங்கப்பன்

| | | |
|---|---|---|
| பெயர் | : | முனைவர் மூ.அங்கப்பன் |
| பிறந்த நாள் | : | 16.06.1948 |
| தந்தை | : | ம. மூக்கன் செட்டியார் |
| தாய் | : | சின்னம்மாள் |
| பள்ளிப்படிப்பும் பட்டங்களும் | : | புனித ஜேம்ஸ் உயர்நிலைப்பள்ளி, பாலக்குறிச்சி |
| | : | தமிழ் வித்வான் கணேசர் செந்தமிழ்க் கல்லூரி, மேலைச்சிவபுரி |
| | : | பி.ஏ.(வரலாறு), பி.எட்.,எம்.ஏ.,(தமிழ்), எம்.எட்., எம்.பில்., பி.எச்.டி., |
| | | தமிழாசிரியர்ப் பயிற்சி மன்னர் கல்லூரி, புதுக்கோட்டை |
| பணி | : | 1. தமிழாசிரியராகச் சென்னையில் ஓராண்டு<br>2. சங்கர் மேல்நிலைப்பள்ளி 34 ஆண்டுகள் (23 ஆண்டுகள் தமிழாசிரியர் / மேனிலைத் தமிழாசிரியராக 11 ஆண்டுகள்) பணி நிறைவிற்குப் பின் தொடர்ந்து கல்வியியல் கல்லூரி முதல்வர் |
| சிறப்புப் பட்டங்கள் | : | 1. மாணிக்கவாசகமணி<br>2. திருக்குறள் தென்றல்<br>3. நகைச்சுவைத் தென்றல் |
| படைத்த நூல்கள் | : | 1. வாதவூர் வள்ளல் பிள்ளைத் தமிழ்<br>2. வங்க முனிவர் பிள்ளைத் தமிழ்<br>3. சௌந்திரநாயகி அந்தாதி<br>4. ஐயப்பன் பாமாலை<br>5. திசைமாறிய தென்றல் (புதுக்கவிதை)<br>6. முனைவர் ஆய்வேடு |



......மாணிக்க வாசகரே திருவாசகம் எனுமாறு இந்நூல் முழுவதும் திருவாசகத்தில் வரும் சிவநெறிக் கருத்துக்கள், மெய்யியலாம் தத்துவம், சிவபெருமானின் சிறப்பினைக் கூறும் நூல்களின் சாரம் எல்லாம் விரவி வருகின்றன. திருவாசகத்தில் வரும் வரலாற்றுக் கூறுகள், மெய்யியல் கருத்துக்கள் ஆகியவை இந்நூலில் வருமிடங்களில், அவற்றை விளக்கிவிடுவது, இப்பாடல்களைப் படிப்போர்க்கு முழுமையாய் அறிந்து படிக்கத் துணையாகும்.

...... முனைவர் அங்கப்பனின் இப்பிள்ளைத் தமிழ் தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒரு புதுவரவு எனப் பொறிக்கத் தக்கது. வள்ளாலார் திருவாசகம் பற்றிப் பாடும் போது, 'ஊன் கலந்து, உயிர் கலந்து உவட்டாமல் இனிப்பதுவே' என்றார். இப்பிள்ளைத் தமிழும் சிறிதும் தெவிட்டாமல் இனிமையைப் பொழிகிறது.

- தமிழண்ணல்